4 பக்கங்கள் 15 காசுகள்

## சட்டமன்றத்தில் பயங்கர ஊழல் குற்றச்சாட்டு

பெங்களூர், மார்ச். 15—

வறட்சி நிவாரண வேலைகளில் ரூ. 15 கோடியும் விதைகள் [விற்பனையில் ரூ. 8 கோடியும் மோசடி செய்யப்பட்டிருப்பதாக கர்நாடக சட்டமன்றத்தில் எதிர்கட்சித் தலைவர் குற்றம் சாட்டினர். இந்தக் குற்றச்சாட்டை கூறுகையில் ராஜினமா கடிதத்தை முன் கூட்டியே சபாநாயகரிடம் கொடுத்து குற்றசாட்டு நிருபிக்கப்படாவிட்டால் எம். எல்.ஏ, பதவியிலிருந்தும் அரசியலிலிருந்தும் விலகிவிடுவதாக அவர் கூறினர்.


# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 22—3—74 வெள்ளி மலர் 68


## டாக்டர்கள் ...

ஹைதராபாத், மார்...

இங்கு வேலை நிறுத்தம் செய்யும் ஜூனியர் டாக்டர்கள் 10 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

மருத்துவத்துறை டைரக்டர் அலுவல... முன் ஆர்ப்பாட்டம் செய்த போது அவர்கள் ... செய்யப்பட்டனர்.

## "சோசலிச" இந்தியா!

அசாம் மாநிலம் ஜோர்காட் என்னுமிடத்திலுள்ள ஒரு தேயிலை தோட்டத்தில் வேலை பார்க்கும் இரண்டு தொழிலாளர்கள் பட்டினி கிடந்து செத்திருக்கின்றனர். மேலும் 14 பேர் உணவின்றி கவலைக்கிடமாக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளனர். சென்ற 6 வார காலமாக அவர்களுக்கு வாரந்தோறும் கிடைக்க வேண்டிய கூலி கொடுக்கப்படவில்லை. [வாரக் கூலியை நம்பி வாழ்ந்த இத்தொழிலாளர்கள் தற்பொழுது தெருவில் பிச்சையெடுக்கின்றனர்.

—"டைம்ஸ் ஆப் இந்தியா" பிப்ரவரி-26.

இந்தியாவிலுள்ள 34 சணல் ஆலைகள் 1972-ம் வருடத்தில் 7.86 கோடி ரூபாய் லாபமாக அடைந்துள்ளன. சணல் தொழில்பற்றி இந்திய வங்கிகள் குழு நடத்திய பொருளாதார ஆய்வில் இந்த உண்மை தெரிய வந்தது.

—"எகனமிக்டைம்ஸ்" பிப்ரவரி-24.

"ஆட்சி பீடத்திலிருப்பவர்களுக்கு லஞ்சம் கொடுத்தும், கட்சி நிதிக்கு ரகசியமாக நன்கொடை கொடுத்தும் நாமும் லஞ்ச லாவண்யங்களுக்கு துணை போயுள்ளோம்."

—இந்திய வர்த்தகர் குழுவின் முன்னுள் தலைவர் வீரன்ஷா, அக்குழுவின் வருடாந்திரக் கூட்டத்தில் பேசியது.

—"இந்துஸ்தான் டைம்ஸ்" மார்ச்-4.

## மீண்டும் மின் நெருக்கடி அபாயம்

புதுடில்லி, மார்ச். 20—

சணல் ஆலை, பஞ்சாலை, எஞ்ஜினியரிங் தொழிற்சாலை போன்ற பிரதான தொழிற்சாலைகளுக்கு மின்சார சப்ளைக்கு தடை ஏற்படும் நிலையில டீசல் ஜெனரேட்டர்கள் இறக்குமதிக்கு மீண்டும் அனுமதி வழங்குவது பற்றி மத்திய அரசின் வர்த்தக அமைச்சகம் ஆலோசித்து வருகிறது.

சென்ற ஆண்டு மார்ச் மாதத்தில் வறட்சி நிலைமை ஏற்பட்டு அணைக்கட்டு நீர்மட்டம் குறைந்ததால் நாடெங்கும் மின்சார பற்றுக்குறை ஏற்பட்டது. இந் நிலையில் ஜெனரேட்டர்களை இறக்குமதி செய்து தொழிற்சாலைகளை நடத்துவதற்கு இந்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது.

மின்சார நெருக்கடி சற்று தணிந்ததும் அக்டோபர் மாதத்திலிருந்து ஜெனரேட்டர் இறக்குமதிக்கு மீண்டும் தடை வந்தது.

எனினும் இப்போது மீண்டும் மின்சார பற்றுக்குறை ஏற்படும் அபாயம் தோன்றியுள்ளதால் டீசல் ஜெனரேட்டர்களை இறக்குமதி செய்ய அனுமதி கோரி வரும் மனுக்களை ஏற்குமாறு மத்திய அரசின் வர்த்தக இலாகா காரியதரிசி ஏற்றுமதி, இறக்குமதி கண்ட்ரோலரைக் கேட்டுக் கொண்டுள்ளார்.

## மார்ச். 23-ல் பீகார்பந்த்

பாட்ஞு, மார்ச். 20—

பீகார் மாநிலத்தில் நடைபெறும் போராட்டங்களை ஒடுக்க போலீசார் நடத்திய தடியடி துப்பாக்கிச் சூடு இவைகளைக் கண்டித்து 23-ல் பீகார் பந்த் நடத்துவதென அம்மாநில மாணவர் சங்கங்களின் கூட்டுக் கமிட்டி அறிவித்துள்ளது.

மார்ச் 21-ல் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தும் பொருட்டு மாணவர்களின் மௌன அஞ்சலி செலுத்தப்படும் என்றும் 1955ம் ஆண்டில் போலீசாரால் சுட்டுக்கொல்லப்பட்ட கல்லூரி மாணவரான தினேஞத் பாண்டேயின் ஞாபகார்த்ததினத்தில் தியாகிகளுக்கு மௌன அஞ்சலி செலுத்தப்படும் என்று அக்கமிட்டியில் தீர்மானம் நிறைவேறியுள்ளது.

மேலும் சட்டமன்றத்தில் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்திய மாணவர்கள் மீது அடக்குமுறை நடத்தியதற்கு பீகார் மாநில முதல்வர் அப்துல் கபூரின் அமைச்சரவையே பொறுப்பாகும் என்று மற்றொரு தீர்மானம் கூறுகிறது.

# போராடும் மக்களுக்கு காங்கிரஸ் சவால்

## கிளர்ச்சிகளை அடக்க மேலிடத்தின் முடிவு

புதுடில்லி, மார்ச். 20—

குஜராத்தை தொடர்ந்து பீகாரிலும் மக்களின் எழுச்சி ஏற்பட்டிருப்பது காங்கிரஸ் மேலிடத்தில் கலக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. பீகார் நிலைமையை விவாதிப்பதற்கு காங்கிரஸ் நாடாளுமன்ற கட்சியின் நிர்வாகக் குழு கூட்டம் கூடியது.

பாட்ஞுவில் மக்களின் சீற்றம் முன்னெப்போதும் கண்டிராத அளவில் கரைபுரண்டோடியிருப்பது பற்றி நிர்வாகக்குழு கூட்டத்தில் உறுப்பினர்கள் அதிர்ச்சி தெரிவித்தனர்.

நிலைமையைக் கண்டறிய உள்துறை அமைச்சர் தீட்சித் ஏற்கனவே பாட்ஞுவுக்கு அனுப்பி வைக்கப் பட்டுள்ளார்.

நிர்வாகக் குழுக் கூட்டத்தில் பிரதமர் இந்திராவும் காங்கிரஸ் தலைவர் சர்மாவும் கலந்து கொண்டனர்.

விவாதத்தைத் தொடக்கி வைத்துப் பேசிய சத்பால் கபூர் பீகாரில் பாசிஸ்ட் சக்திகளின் கைபோங்கியுள்ளதென்றும் காங்கிரஸ்காரர்கள் இந்த நிலைமையை உறுதியுடன் எதிர்த்து நிற்க வேண்டும் என்றும் கூறினர்.

பீகாரில் தோன்றியிருப்பது போன்ற நிலைமையை சமாளிக்க காங்கிரஸ் கட்சியில் போதிய அளவில் தொண்டர்கள் இல்லை என்று விவாதத்தின் போது கருத்து உருவாகியது.

கிளர்ச்சி உருவாவதை காங்கிரஸ் கட்சி பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது என்றும் அரசை எதிர்த்து ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றால் காங் கட்சி போட்டி ஆர்ப்பாட்டங்கள் நடத்த வே... டும் என்றும் கூட்டத்... கருத்து உருவாகியது.

உணவு கிடைக்க... மக்கள் போராடி... அதை எதிர்க்க வே... டும் என்று நிர்வாகக் ... கூட்டத்தில் கருத்து ... வாகிவிருப்பதின் மூ... போராடும் மக்களு... எதிராகக் குண்டர்களை ... விட வேண்டும் எ... கொள்கைக்கு காங்கி... மேலிடமே ஒப்புதல் அ... பது நிரூபணமாகியுள்ள...

விலைவாசியை எதிர்... "பந்த்"களும், ஆர்ப்பாட்... களும் நடைபெறு... மக்களுடைய அதிர்ப்தி... ருந்து வெளிப்படும் ... வடிக்கை என்று காங்கி... தலைவர்கள் பார்க்க வி...

போராடும் மக்க... போலீசையும் ராணுவத்... யும் ஏவி விட்டு அடக்கு... டன் காங்கிரஸ் தலைவர்... திருப்தியடைய வில்லை.

காங்கிரஸ் கட்சி... காப்பாற்ற குண்டர் ப... யின் பலத்தை காங்கி... தலைவர்கள் நாடுவதை... நிர்வாகக் குழுக் கூட்... தின் விவாதங்கள் வெ... படுத்துகின்றன.

## துரித நடைபோட்டு முன்னேறுவது யார்?

# சோஷலிஸ்ட் சீனமா? முதலாளித்வ இந்தியாவா?

கல்கத்தாவிலிருந்து வெளிவரும் "ஸ்டேட்ஸ்மென் என்ற ஆங்கில நாளேட்டில் கடந்த பிப்ரவரி 12, 13 தேதிகளில் இந்தியாவிலும் சீனவிலும் பொருளாதார அபிவிருத்திஎப்படி உள்ளது?"—என்று அய்யங்கார் என்பவர் கட்டுரை தீட்டியிருந்தார். அவர், தான் ஒரு விருப்பு வெறுப்பற்ற நடுநிலை அறிவாளி என்று சொல்லிக் கொண்டுள்ளார்.

ஆனல் அவரது கட்டுரையில் முதலாளித்துவத்திற்கு வக்காலத்து வாங்குவதிலும் சீனவின் முன்னேற்றத்தை மறைப்பதிலும் ஈடுபட்டிருக்கிறர்.

சீன தேசத்தின் மகத்தான சோஷலிஸ்ட் முன்னேற்றத்தையும், இந்திய தேசத்தின் எல்லாவித நெருக்கடிகளையும் எடுத்துக்கூற அவர் மறுக்கிறர். பூனை கண்ணை மூடிக் கொண்டால், பூலோகம் இருண்டு விடுமா, என்ன?

### உண்மையை மறைக்க ஒன்ருகப் போட்டு தயிர் கடைகிறர்

அவரது கட்டுரையின் கடைசியில், முடிக்கின்றபோது என்ன சொல்லுகிறர் தெரியுமா?

"இந்தியாவிலும், சீனவிலும் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தியை ஒட்டுமொத்தமாகப் பார்ப்போமேயானல்—ஒவ்வொன்றும் சில பல துறைகளில் குறிப்பிடத்தக்க சாதனைகளை வென்றுள்ளது; அதே போல் வேறு பல துறைகளில் தோல்விகளும் கண்டிருக்கின்றன. சீனவின் சோஷலிஸ்ட் அமைப்பானலும் சரி, இந்தியாவின் முதலாளித்துவ அமைப்பானலும் சரி—பொருளாதார அற்புதங்களைப் புரிய மந்திரக்கோல் எதையும் வைத்திருக்கவில்லை.........அதே போலவே எந்தவொரு நாட்டிடமும் ஏகபோக ஞானம் என்று எதுவுமில்லை" எனக் குறிப்பிட்டிருக்கிறர்.

அவரது உள் நோக்கம் என்ன என்பது இதிலிருந்து தெளிவாகி விட்டது.

சீனவில் எடுத்துக் கொள்ளப்படும் சோஷலிச நடவடிக்கைகளானது, இந்தியாவின் முதலாளித்துவ நடவடிக்கைகளை விட சிறப்பானது அல்ல என்று காட்டுவதற்கே, அவர் படாத பாடு படுகிறர்.

உண்மை நிலைதான் என்ன என்பதைப் பார்ப்போம்.

### துவக்க காலத்தில் கஷ்டங்கள் இருந்தன.

சீனவில் 1949-ம் ஆண்டில் ஏகாதிபத்ய கைப் பொம்மையான சியாங்கே ஷேக் ஆட்சி ஒழிந்து — கம்யூனிஸ்டு கட்சித் தலைமையில் மக்கள் சீனக் குடியரசு அமைந்தது.

இந்தியாவில், 1947-ம் ஆண்டில், பிரிட்டிஷ் ஆட்சி அகன்று, இந்தியக் குடியரசு அமைந்தது,

அந்தக் காலத்தில், இந்தியாவை விட சீன எவ்வளவோ பின் தங்கிய நிலைமையில் தான் இருந்தது.

சீன விடுதலையடைவதற்கு முன்னல் ஜப்பானிய ஆக்கிரமிப்பினலும், உக்ரமான உள்நாட்டுப் போரினலும்—அந்தக் காலத்தில் இருந்த ஒரு சில போக்குவரத்துப் பாதைகளும், தொழிற்சாலைகளும் நடுநாசமாக்கப்பட்டு விட்டன,

### உபத்திரவம் உண்டு உதவி இல்லை

புரட்சி முடிந்த பிற்பாடாவது சீன நிம்மதியாக இருக்க முடிந்ததா? இல்லை.

அமெரிக்காவின் தலைமையில் முதலாளித்துவ உலகம் முழுவதுமே சீனவுக்கு எதிரிடையாகஇருந்தது எப்படியேனும் சீனவின் குரல் வளையைத் திருகி விடவேண்டுமென்று அவையெல்லாம் பகை வெறி கொண்டு பகிஷ்கரித்து நின்றன,

ஆரம்பகாலத்தில் சோவியத்யூனியன் உதவத்தான் செய்தது. ஆனல்சோவியத் யூனியனே இரண்டாவது உலக மகாயுத்தத்தின்போது கடுமையாகக் காயமுற்று கிடந்தது. சோவியத் யூனியன் அளித்து வந்த அந்த உதவியும் கூட சீனவுக்கும் சோவியத் யூனியனுக்கு மிடையே ஏற்பட்ட தகராறு காரணமாக. 1960-ம் ஆண்டிலேயே வாபஸ் பெறப் பட்டு விட்டது.

அதன் விளைவு என்ன? சீன தன் சொந்தக்காலிலேயே நிற்க வேண்டியதாயிற்று. தனக்கு வேண்டியதனைத்தையும் தானே தேடிக்கொள்ள வேண்டியதாயிற்று.

கட்டுரையாளர் கூறுவது போல "அன்னியநாடுகளிடமிருந்து இந்தியா தொழில் நுட்ப உதவியை தங்குதடையின்றி பெற்றது. அதுபோலவே, அன்னிய மூலதனத்தையும் எவ்விதத்தடங்கலுமின்றி பெற்றது ஆனல் சீனவுக்கோ, அன்னிய தொழில் நுட்ப உதவியும் கிடைக்கவில்லை. அன்னிய மூலதனமும் கிடைக்கவில்லை."

ஆம்; இந்தியாவுக்கு கிடைத்தது போன்று தாராளமாக வெளிநாட்டுஉதவி சீனவுக்குக்கிடைக்கவில்லை என்பது உண்மைதான்,

ஆனல், சீனவுக்கும் சிறிது உதவி கிடைத்தது. அது இந்தியாவுக்கு கிடைத்ததுபோல் அல்ல அதில் வித்தியாசம் உண்டு,

### புரட்சிகர முன்னேற்றம்

சீனவில் விவசாயப்புரட்சி நடந்தேறி விட்டது. சீனப் பெருமுதலாளிகளின் தொழிற்சாலைகளையும் அன்னியக்கம்பெனிகளையும் சீனமக்கள் குடியரசு தேசவுடமை ஆக்கிற்று.

பத்தே ஆண்டுகளுக்குள் விவசாயிகளின் சிறு நிலங்கள் யாவும் கூட்டுறவுப் பண்ணைக்குள் கொண்டு வரப்பட்டன.

சிறு தொழில் முதலாளிகள் அரசாங்க தொழில்களிடன் இணைக்கப்பட்டார்கள்.

புரட்சிக்குப் பிறகு தீவிர நடவடிக்கைகளில் சீன அரசு மும்முரமாக இறங்கிற்று. சகல நிதி நிறுவனங்களையும் சர்க்காரே எடுத்துக் கொண்டது, எல்லா தொழில் நிறுவனங்களையும் அரசாங்கமே மேற்கொண்டது. அனைத்து வர்த்தக நிறுவனங்களையும் அரசே கைப்பற்றியது.

மற்றும் போக்கு வரத்துக்கள், அயல் நாட்டு வர்த்தகம், முக்கியமான பொருள்களில் உள்நாட்டு வியாபாரம் முதலான அனைத்தையும் உடனடியாக அரசாங்கமே எடுத்துக் கொண்டது.

நாட்டின் பொருளாதாரத்தில் கூடுருவியிருந்த ஏகாதிபத்திய வாதிகளையும் நிலப் பிரபுக்களையும், பெரு முதலாளிகளையும் அடியோடு துடைத்தெறிந்து விட்டார்கள்.

### ஒரே சமயத்தில் இரண்டு முறைகள்

சீனவின் பொருளாதாரத்தை வளர்ப்பதற்கு, சீன சர்க்கார் இரண்டு முறைகளை ஏக காலத்தில் கடைப் பிடித்தது.

முதலாவது முறை என்ன?

சீன நாடு மக்கள் தொகையில் உலகிலேயே முதற்பெரும் நாடு. ஆகவே அத்தனை கோடி மக்களையும் உற்பத்தி இயக்கத்தில் ஈடுபடுத்த முனைந்தார்கள்.

கோடானு கோடிக்கணக்கான மக்கள், வழக்கமாகப் பயன்படுத்தப்படும் சாதாரண கருவிகளை எடுத்துக்கொண்டு உற்பத்தியில் ஈடுபட வழி வகுத்தார்கள்.

ஏற்கனவே, கிராமப்புற ஏழைகளுக்கு நிலத்தைப் பகிட்டுக் கொடுத்து விட்டார்கள். கலப்பை பூட்டி உழுவதற்கு

(4-ஆம் பக்கம் பார்க்க)

### லேலண்ட் ஊழியர் வழக்கு

சென்னை மார்ச் 19—

லேலண்ட் ஊழியர்கள் மீதான போலீஸ் வழக்கை வாபஸ் வாங்கக் கோரி தமிழக முதல்வர் கருணநிதியிடம மனு அளிக்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

### ஈராக்கும் சிரியாவும் அமெரிக்காவுக்... எண்ணை அனுப்பாது

பெய்ரூட், மார்ச். ...

அமெரிக்கா [நாட்டு... எண்ணை ஏற்றுமதி செ... தில்லை என்று அரபு ... களான ஈராக்கும்சிரியா... முடிவெடுத்துள்ளன.

## வலது கம்யூனிஸ்டுகளுக்கு... முற்போக்கு, பிற்போக்கு!

காங்கிரஸ் கட்சிக்குள்தான் "முற்போக்கு" ...வையும், "பிற்போக்கு" பிரிவையும் இதுநாள் வ... வலது கம்யூனிஸ்ட் கட்சி கண்டு வந்தது.

இப்போது நிலைமை மாறியுள்ளது.

வலது கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளேயே "மு... போக்கு"ப் பிரிவும், "பிற்போக்கு" பிரிவும் இருப்ப... வெளிப்பட்டுள்ளது.

நாடாளுமன்றத்தில் இந்த இரு பிளவுகள... ஒன்று அரசாங்கத்தை ஆதரிக்கும் நிலையையும் இ... ன்னென்று எதிர்க்கும் நிலையையும் எடுத்தன.

பீகார் நிலைமையைப்பற்றி விவாதிக்க நாடா... மன்றத்தில் ஜனசங்கஉறுப்பினர் ஏ.பி. வாஜ்பாயி,ஒ... வைப்புப் பிரேரணை கொண்டு வந்தார்.

இந்தப் பிரேரணையை வலது கம்யூனிஸ்ட் கட்... யைச் சேர்ந்த ராம்அவதார் சாஸ்திரி. போஜந்திர... முதலிய ஐந்து எம்.பிக்கள் எதிர்த்தனர்.

"முற்போக்கு" காங்கிரஸ் அரசை எதிர்... தற்கு "பிற்போக்கு ஜனசங்கத்துடன் சேரமாட்டே... என்ற நிலையை அவர்கள் எடுத்தனர்.

அதேசமயத்தில்வலது கம்யூனிஸ்ட்எம்.பிகளா... எஸ்.எம். பானர்ஜியும் ஹிரேன் முகர்ஜியும் பிரேரணை... ஆதரவு கொடுத்தனர்.

இவ்விதமாக வலது கம்யூனிஸ்ட்கட்சிக்கு... ளேயே "முற்போக்கு" ப்பிரிவும் "பிற்போக்கு" பிரி... இருப்பது பகிரங்கமாகத் தெரியவந்துள்ளது.

# ...ஜெட் விவாதமும் சவாண் பதிலும்

நாடாளுமன்றத்தில் பட்ஜெட் விவாதத்துக்குப் ...ளித்த நிதியமைச்சர் சவாண் வரி விதிப்புகளில் ... மாறுதலையும் செய்யமுடியாது என்று பதிலளித்...ள்ளார்.

நடப்பு ஆண்டு பட்ஜெட்டை ...ணவீக்கத்துக் ...கதிரான பட்ஜெட் என்று அவர் வர்ணிக்கிறார்.

இந்தப் பட்ஜெட்டைத் தாக்கல் செய்த 10 நாட்...களுக்குள்ளேயே—புதிய வரிகள் அமுலுக்கு வருமுன்பே ...பொதுமக்கள் வாங்கி உபயோகிக்கும் பொருள்களின் ...சில்லறை விலை 20-லிருந்து 50 சதவிகிதம் வரை உயர்ந்...துள்ளது என்று ஒரு ஆய்விலிருந்து தெரிந்துள்ளது.

நடப்பாண்டு பட்ஜெட்டில் மண்ணெண்ணெ உள்...பட்ட, பொது மக்கள் வாங்கி உபயோகிக்கும் பொருள்...களின் மீதெல்லாம் எக்சைஸ் வரி அதிகரிக்கப்பட்டுள்ளது.

இந்த வரிவிதிப்பை எல்லா பிரிவுகளையும் சேர்ந்த ...றுப்பினர்களும் பட்ஜெட் விவாதத்தின்போது எதிர்த்...ம் சவாண் மறுபரிசீலனை செய்ய மறுத்துள்ளார். ...பால் கார்டு விலை அதிகரிப்பைக்கூட ரத்து செய்ய ...றுத்துள்ளார்.

இந்த வரிவிதிப்பு காணாது என்று நடப்பாண்டு ...ட்ஜெட்டில் ரூ.125 கோடி பற்றுக்குறையும் விழு...றது. இந்தத் தொகை உண்மையான பற்றுக்குறை...ளவைக் காட்டும் தொகையல்ல.

சென்ற ஆண்டு பட்ஜெட்டில் ரூ 87 கோடிதான் ...ண்டு விழுவதாகக் காட்டப்பட்டது. ஆனால் உண்மை...ல் ரூ.650 கோடி துண்டுவிழுந்துள்ளது.

இந்த ஆண்டு பட்ஜெட்டிலும் ரூ.125 கோடிதான் ...ற்றுக்குறை விழுவதாக காட்டப்பட்டிருப்பது உண்மை...யல்ல என்பதுஊரறிந்த ரகசியம்.

சென்ற 4 ஆண்டுகளாக பட்ஜெட் பற்றுக்குறை கணிச...மாக அதிகரித்து வந்துள்ளது. நோட்டடிப்பதில் உலகில் ...அனைத்து நாடுகளையும் மிஞ்சியிருப்பது இந்தியாவே. இந்த ...உண்மையை நிதியமைச்சர் சவாணும் மறுக்க முடியுமா? ...இந்நிலையில்தான தற்போதைய கணிப்பை யதார்த்த ரீதி...யானது என்று சவாண் வர்ணிக்கிறார்.

இந்தப் பின்னணியில் திட்ட முதலீடுகளுக்கு நிதி ...பற்றுக்குறை காரணமாக பெரும நெருக்கடி ஏற்...பட்டுள்ளது.

5-வது திட்டத்தின் முதலாண்டில் சென்ற ஆண்டை...விட அதிக முதலீடு இருக்கும் என்று அமைச்சர்கள் ஜம்ப...மாகப் பேசினாலும் விலையேற்றத்தின காரணமாக எல்லா ...ஒதுக்கீடுகளும தகர்ந்து போய் விட்டன. திட்டத்தையே ...நிறைவேற்ற முடியாத பரிதாப நிலையை அரசு சந்தித்...துள்ளது. திட்டத்தை அமுலாக்குவதற்கு மக்களைத் தாக்கு...வதைத் தவிர வேறு எந்த வழியையும் இந்த அரசு வைத்...திருக்கிறதா?

நடப்பாண்டு பட்ஜெட்டில் ஏறிவரும் விலைவாசிக்...கேற்ப அரசு ஊழியர்களுக்குக் கொடுக்க வேண்டிய ...அகவிலைப்படி உயர்வுகூட கணக்கில் எடுத்துக் கொள்...ளப்படவில்லை. இந்த நிலையில் இந்த பட்ஜெட் எவ்வாறு ...யதார்த்த ரீதியாக இருக்க முடியும்?

இந்தியப் பொருளாதாரத்தைக் குலைத்து தற்போ...தைய நெருக்கடிக்குக்காரணமாக உள்ள கருப்புப் ...பணத்தை வெளிப்படுத்துவதற்கு சவான் எடுத்திருக்கும் ...நடவடிக்கை என்ன?

உயர்ந்த வருமானமுள்ள பிரிவினருக்கு இந்தப் ...பட்ஜெட்டில் வரிச்சலுகை ...யளித்திருப்பதின மூலம் ...அவர்கள் தாமாகவே வரி செலுத்துவார்கள் என்று ...சவான் நம்புகிறார்.

ரூபாய் நோட்டை செல்லாததாக்கும் குறைந்த...பட்ச நடவடிக்கையைக்கூட அவர் எடுக்க மறுக்...கிறார்.

முதலாளிகளுக்கு தாஜா செய்யும் நிலை நீடிப்...பதையே நடப்பாண்டு பட்ஜெட் காட்டுகிறது.

பட்ஜெட் விவாதத்தில் எதிர்க்கட்சியினர் கூறிய ...கருத்துக்களுக்கு சவாண் அறவே செவிசாய்க்க மறுப்...பதும், நாட்டில் எத்தகைய நெருக்கடி உருவானாலும் மக்கள் ...விரோதக் கொள்கைகளை இந்த அரசு ஒருநாளும் ...கைவிடாது என்பதையே ஊர்ஜிதப்படுத்தியுள்ளது.

இந்த சுமைகளையெல்லாம் மக்கள் சகித்துக் ...கொண்டிருப்பார்கள் என்று இந்த அரசு இன்னும் ...எண்ணிக் கொண்டிருக்குமானால் அது நடக்காது என்பதை ...தற்போது குஜராத், பீகார் போன்ற இடங்களில் ஏற்பட்...டிருக்கும் எழுச்சியே எடுத்துக்காட்டுகிறது.

## சென்னை ஓட்டல் தொழிலாளர் சங்க ...0 வது ஆண்டு விழா

சென்னை, மார்ச். 20—

சென்னை நகர ஓட்டல் தொழிலாளர் சங்கத்தின் ... ஆண்டு பேரவைக் ...ம் மார்ச் 9-ந் தேதி ... அலுவலகத்தில் நடை...பெற்றது. சங்கத்தலைவர் ...ர் எம். கிருஷ்ண...மூர்த்தி தலைமை வகித்தார். ...செயலாளர் தோழர் ...பி. கே. கிருஷ்ணன் ...அறிக்கை சமர்ப்பித்து ...கையில், இன்... அரசியல் சூழ்நிலை ...விளக்கி, தொழிலா...ளர் ஒற்றுமையைய ...வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினர்.

ஓட்டல் தொழிலாளர்களின் ஒற்றுமை இயக்கமான தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் நலப்பாதுகாப்பு குழுவின் இயக்கங்கள் பற்றியும் அதை வலுப்படுத்துவதற்கு உறுப்பினர்கள் பணியாற்ற வேண்டிய தன் அவசியம் பற்றியும் விளக்கினார்.

1973-ம் ஆண்டு வரவு செலவு கணக்குகளை தோழர் ஏ. கே. ...ன் சமர்ப்பித்தார். விவாதத்...

(3-ம் பக்கம் பார்க்க)

## அய்ய... சங்க ஊழியர்

# நாராயணன் மீது தாக்குதல்

# தி. மு. க. வினர் ரௌடித்தனம்

திண்டுக்கல், மார்ச், 19—

சென்ற ஜனவரி மாதம் நெல் அறுவடை காலத்தில் திண்டுக்கல் தாலுகா அய்யம்பாளையம் கிராமத்தில் அய்யங்கோட்டை, புதூர், சங்காரெட்டி கோட்டை ஆகிய பகுதிகளில் உள்ள கூலி விவசாயிகள் ஒன்று திரண்டு, இன்றுள்ள விலைவாசி உயர்வுக்கு தக்கவாறு கூலிஉயர்வு கொடுக்க வேண்டுமென கோரிக்கை வைத்துப் போராடினார்கள்

அப்பகுதி, நிலஉடைமையாளர்கள் போலீஸ் உதவி கொண்டு போராட்டத்தை உடைக்க வெளியாட்களை கொண்டுவந்து அறுவடையை நடத்த முயற்சித்தனர். ஆண்களும பெண்களும் வீரமுடன் எதிர்த்து நின்று ஒற்றுமையுடன் போராடி, போலீசையும், நிலப்பிரபுக்களையும் பணிய வைத்தார்கள்.

30—1—74 ம் தேதியன்று திண்டுக்கல் தாசில்தார் ...தலத்திற்கு வந்து நிலச் சொந்தக்காரர்களையும். விவசாயிகள் சங்க ஊழியர்கள் சி த தங்கராசு, கே. நாராயணனையும் அழைத்து பேசி கூலி உயர்வு ஒப்பந்தமானது. அதன்படி நில உடைமையாளர்கள் சிலர் ஒப்பந்தக் கூலியை கொடுத்தார்கள்.

### கூலி உயர்வு கோரிக்கை

இந்த போராட்டக்களால் எழுச்சி பெற்ற அய்யம்பாளையத்தில ஏர்மாடு வைத்து கூலிக்குப் போகும், உழவர்கள் ஒன்று கூடினாகள். விவசாய சங்க ஊழியர்களான சி, த. தங்கராஜ், கே. நாராயணனை சந்தித்தார்கள். உழவர்கள் கூட்டத்தைக் கூட்டி ஏர்மாடு உள்பட கொண்டுபோய் உழுபவர்களுக்கு 10 ரூபாயும். ஏர் மாடு இல்லாமல் உழப்போகும் ஆண்களுக்கு 4 ரூபாயும் கேட்பதென்று முடிவு செயதார்கள்.

### தி மு க ரௌடிகள் தாக்குதல்

மேலே கண்ட போராட்டங்களை முன்னின்றுநடத்திவர்களில் தோழர் கே. நாராயணன் ஒருவர். 4—3—74 ல கே. நாராயணன் விவசாயசங்க வேலையை முடித்து காலை 10 மணியளவிற்கு வீடு திரும்பும்போது அய்யம பாளையம பஸ்ஸ்டாண்டிற்கு கீழ்புறம், அவ்வூர் தி.மு.க. கட்சியை சேர்ந்த சிலர் இன்னும் சிலபேர் நிலப்பிரபுக்களின் தூண்டுதலின் பேரில்தோழர் நாராயணனை வழிமறித்து "ஏண்டா நீ தானே அய்யங்கோட்டையிலும், பட்டிவீரன்பட்டியிலும் போராட்டம் நடத்தினே? இப்ப இங்கேயும் கூலிக்காரனை தூண்டிவிட்டுக்கிட்டிருக்கிறயா உன்னை கொல்லாமல் விட மாட்டோம்" என்று சொல்லி கோரமாக தாக்கியிருக்கின்றனர். அதில் திலகர் என்பவர் இரண்டு நபர்களின் தோள்களின்மீது கையைப் போட்டுக் கொண்டு தூறியாடி, நாராயணனை உதைக்கும்போது கவறி சாக்கடை கல்லில் விழுந்து காலில் காயப்பட்டு விட்டதாம். உடனே — நாராயணன் காலை ஒடித்து விட்டான் என்று கூச்சல போட்ட வாறு மீண்டும் நாராயணனை மயங்கி விழுந்து உயிருக்கு ஆபத்தான நிலைமை வரையில் தாக்கினர்.

இது விபரம் அறிந்த விவசாயிகள் சங்க ஊழியர்கள் சித தங்கராசு உட்பட சென்று நாராயணனைத தாக்கிய நபர்கள் மேல் நடவடிக்கை எடுக்கும் படி பட்டி வீரன் பட்டி காவல் நிலையத்தில் இருந்த ரைட்டரிடம் கூறியிருக்கிறார்கள். சப்-இன்ஸ்பெக்டரும், ஏட்டும் இல்லையென்று கூறி ஸ்டேஷனில் இருந்த ரைட்டர் நடவடிக்கை எடுக்க மறுத்திருக்கிறார்.

எனவே டி. எஸ், பிக்கு போன் செய்திருக்கிறார்கள் டி எஸ் பி தலைமையகத்தில்இல்லை. இதற்குள் டி என் யு 4200 நி ஜீப், டி என் யு 3486, எம் எஸ் எக்ஸ் 5515 நம்பர் பிளசர் கார்களில் பட்டி வீரன்பட்டி பிரசிடெண்ட் நடராஜனும் (தி மு க) டபிள்யு பி எ எஸ்கிருஷ்ணமூர்த்தியும் நாராயணனை காரில் தூக்கிப் போட்டு வந்து பட்டி வீரன் பட்டி காவல் நிலயத்தில் நாராயணன் பேரிலேயே பொய் புகார் கொடுத்திருக்கிறார்களாம்.

உயிருக்கு ஆபத்தான நிலையிலும் தோழர் நாராயணனுக்கு பட்டிவீரன்பட்டி டாக்டர் மருத்துவசிகிச்சை செய்யவில்லையாம்.

இதன்பின் மயக்கம் தெளிந்தபிறகு நாராயணன் கொடுத்த புகார் மீது நடவடிக்கை எடுக்கவில்லை. அதற்குப்பதிலாக அடிபட்ட நாராயணன் மீது பட்டி வீரன்பட்டி போலீசார பொய்கேசு போட்டிருக்கிறார்கள்.

தோழர் நாராயணன்மீது போடப்பட்ட பொய் வழக்கை வாபஸ் வாங்க வேண்டுமென்றும் தோழர் கே. நாராயணனை தாக்கியவர்களை உடனே கைது செய்து நடவடிக்கை எடுக்க வேண்டுமென தமிழக அரசையும் சம்பந்தப்பட்ட போலீஸ் அதிகாரிகளையும் கேட்டுக்கொண்டு தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் திண்டுக்கல்—வேடசந்தூர் தாலுகா கமிட்டி தலைவர் தோழர் மு, மாரிமுத்து ஒரு அறிக்கை விடுத்துள்ளார்.

# பாலகிருஷ்ணன் தாக்கப்பட்ட அக்ரமம்

## விசாரணை நடத்துவதாக டி. எஸ். பி. வாக்குறுதி

மதுரை, மார்ச். 20—

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு உறுப்பினர் தோழர் வி, பாலகிருஷ்ணன, மதுரை பவர்லூம் தொழிலாளர் போராட்டக்குழு கன்வீனர் தோழர் ஜே. ஆர். மாதவன் ஆகியோரை போலீசார் கைது செய்து மிருகத்தனமாக தாக்கிய சம்பவம் பற்றி விசாரணை நடத்துவதாக மதுரை டி, எஸ். பி. அறிவித்துள்ளார்,

இச்சம்பவம் குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின்தமிழகசெயற்குழு உறுப்பினர் தோழர் எம். ஆர். வெங்கட்ராமன எம்.பி நேற்று டி. எஸ். பி.யை சந்தித்து விசாரணை நடத்த வேண்டுமென்றுகோரினர்.

தாக்குதலுக்கு தலைமை வகித்த சப் இன்ஸ்பெக்டர் காளிமுத்து சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஆகியோர் மீது விசாரணை நடத்துவதாக தோழர் எம். ஆர். வெங்கட்ராமனிடம் டி. எஸ். பி. தெரிவித்தார்.

தோழர் பாலகிருஷ்ணனும் அவருடன் கைதான மற்ற தோழர்களும் நேற்று விடுதலை செய்யப்பட்டனர்.

## ஆசிரியர் கூட்டணி பொதுக்குழு

நன்னிலம், மார்ச். 20—

நன்னிலம் வட்டார ஆசிரியர் கூட்டணியின் அவசர பொதுக்குழுக் கூட்டம பேரளத்தில வட்டாரத் தலைவர் திரு கே, குப்புசாமி தலைமையில் நடைபெற்றது.

ஏப்ரல் மாதம் கொரடாச்சேரியில் நடைபெறும் மாநாட்டினை சிறப்பாக நடத்தவேண்டிய அவசியம் பற்றி தலைவர் குப்புசாமி மாநிலப் பேரவை உறுப்பினர் திரு. இரா. முத்து ஆகியோர் பேசினர். மன்னை வட்டார துணைத்தலைவர் திரு. கே. நீலமேகம் சிறப்புரையாற்றினர்கள். அனைத்து பொதுக்குழு உறுப்பினர்களும் விவாதத்தில் பங்கு கொண்டனர்.

# பாரிசில் மீண்டும் பேச்சுவார்த்தை

பாரிஸ், மார்ச். 20—

தென் வியட்நாமின் அரசியல் அமைப்பு பற்றிய பிரச்னைக்கு அரசியல் ரீதியான தீர்வு காண்பதற்கு சைகோன் நிர்வாகத்துக்கும் (பொம்மை ஆட்சி) தென் வியட்நாம் புரட்சி அரசுக்கும் இடையே வெள்ளிக்கிழமையன்று பாரிசில் பேச்சு வார்த்தை நடைபெறும்.

நல்லெண்ணத்தை மீண்டும் உணர்த்தும் வகையில் சைகோன் நிர்வாகத்தின் யோசனை ஏற்கப்பட்டுள்ளதாக புரட்சி அரசின பிரதிநிதி ஒருவர் அறிவித்தார்.

# தேவராஜ்அர்சின் காலைவாரிவிட காங். எம். பி. க்கள் தீ வி ர ம்!

பெங்களூர், மார்ச் 20—

நிலையான ஆட்சியை நிறுவுவோம்என்று சவடால் அடிக்கும் காங்கிரஸ் கட்சியில், ஒரு மாநிலம் பாக்கியில்லாமல் தகராறு ஏற்பட்டுக் கொண்டு வருகிறது.

இந்த வரிசையில் கர்நாடக மாநிலமுதலமைச்சர் தேவராஜ் அர்சின் காலை வாரி விடவும் முயற்சிகள் தீவிரமடைந்துள்ளன.

கர்நாடகத்தைச் சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் இந்த மாதத்திலேயே பிரதமர் இந்திரா காந்தியையும் காங்கிரஸ் தலைவர் சர்மாவையும் சந்தித்து தேவராஜ அர்சையும், மாநில காங்கிரஸ் தலைவர் ரங்கநாதத்தையும் அவர்கள் வகிக்கும் பதவியிலிருந்து விலக்க வேண்டுமஎன்று வற்புறுத்த முடிவு செய்துள்ளனர்.

இந்தத் தகவலை எஸ். பி. படேல் எம்.பியும் கே. எல். லக்கப்பா எம்பியும் நிருபர்களிடம் தெரிவித்தனர்.

கர்நாடக மாநிலத்தில் மூன்று உபதேர்தல்களிலும் காங்கிரஸ் கட்சி தோல்வி அடைந்ததற்கு தேவராஜ அர்ஸ்தான் காரணம் என்று அவர்கள் குற்றம் சாட்டினர்.

சங்கேஸ்வர் தொகுதி உப தேர்தல் முடிவைப் பற்றி 13 நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூடி விவாதித்து, அந்தக் கூட்டத்தில் இயற்றப்பட்ட தீர்மானம் மாநில காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்கு அனுப்பப்பட்டுள்ளதாகவும் அவர்கள் கூறினர்.

# நீதித்துறை ஊழியர் கோரிக்கைக் குரல்

மதுரை, மார்ச். 20—

மதுரை மாவட்டத்தில் நீதி மன்றங்களில பணியாற்றும் ஊழியர்களின் பொதுக்குழு கூட்டம், மதுரை மாவட்ட நீதிமன்றக் கட்டிடத்தில் திரு. அங்குசாமி அவர்கள் தலைமையில கடந்த 17—3—74 காலை 10-30 மணிக்கு நடந்தது.

### புதிய நிர்வாகிகள்

இக்கூட்டத்தில் 1973-74ம் ஆண்டிற்கான புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திரு கே. கே. காளிதாஸ் தலைவராகவும், திரு. சு. நவாப்தீன் துணைததலைவராகவும், திரு.எச்.வேலாயுதம் செயலாளராகவும், எம கே. முகமது ஜெயினுலாவுதீன் இணைச் செயலாளராகவும், எஸ். ராஜரததினம் பி. ஏ. பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனா.

### கோரிக்கை

பேரவையில் இள நிலை உதவியாளர்களின் வேலைப் பளுவைக் குறைக்க வேண்டுமென்றும், கல்வி ஆண்டின் இடையில் ஊழியர்கள் மாற்றப்படுவது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கூட்ட முடிவில் செயலாளர் எச்.வேலாயுதம் நன்றி நவின்றார்,

# முதலாளித்துவ நாட்டின் சீரழிவு

பான், மார்ச், 19—

மேற்கு ஜெர்மனியில் விவாகரத்துகள் அதிகரித்த வண்ணமுள்ளன. இதனால் பெற்றோர்களிடமிருந்து பிரியும் குழந்தைகளின நிலை பரிதாபகரமாகிக் கொண்டிருக்கிறது.

கணவன் — மனைவி உறவை தகர்க்கும் முறையில் முதலாளித்துவ நாடுகளின 'கலாச்சாரம்" சீரழிந்து கொண்டிருக்கிறது.

கடந்த 15 ஆண்டுகளில் விவாகரத்துகளால் பிளவுபட்ட குடும்பங்களிலவாழும துர்ப்பாக்கிய நிலையை அடைந்த குழந்தைகளின் எண்ணிக்கை இருமடங்காகியுள்ளது.

1956-ல் இத்தகைய குழந்தைகளின் எண்ணிக்கை 42,000-மாக இருந்தது.

1971-ல் இந்த எண்ணிக்கை 90,000 ஆகியது.

இந்த ஆண்டில் இது ஒரு லட்சத்தை எட்டியிருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது.

## தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி ஆத்தூர் வட்ட சிறப்பு மாநாடு

ஆத்தூர், மார்ச்.10—

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் ஆத்தூர் வட்ட சிறப்பு மாநாடு ஆத்தூர் ஆறுமுகனார் மன்றத்தில் 9—3—74 சனிக்கிழமையன்று நடைபெற்றது.

அன்று காலை பெத்தநாயக்கன் பாளையத்தின் வட்டாரக் கிளை மதிவண்டி அணிக்கு, பெத்தநாயக்கன் பாளையம வட்டாரக் கிளையின் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக தாலுகா செயலர் தோழர் பி. இராசுவரவேற்பும், போராடும் ஆசிரியர் சமுதாயத்திற்கு புரட்சிகர வாழ்த்தும் அளித்தார்.

அன்று காலை 10 மணியளவில் ஆத்தூர் அரசினர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியிலிருந்து நூற்றுக்கணக்கானமிதிவண்டிகள், கோரிக்கை அட்டைகளுடனும் நூற்றுக்கணக்கான ஆசிரியர் — ஆசிரியைகள் கோரிக்கை முழக்கங்களை எழுப்பி தங்கவேல் ஆசிரியர் தலைமையில்—

1) அனைத்துப் பள்ளிகளையும் அரசே ஏற்று நடத்து.

2) கல்வி வாரியம்அமைத்திடுக,

3) ஊதிய உயர்வு கொடு'

போன்ற கோரிக்கைகளை முழங்கிக்கொண்டு நகரின் வீதிகளில் ஊர்வலமாக வந்தனர்.

அன்று மாலை நடைபெற்ற கூட்டத்தில் இயக்கத்தின் பொதுச்செயலர் செ.முத்துசாமி எம்.எல்.சி. கலந்து கொண்டு ஆசிரியர் சமுதாயத்தின் நியாயமான கோரிக்கைகளையும், அவைகளை பெற ஆசிரிய சமுதாயம் நடத்திய போராட்டங்களையும், எதிர்காலத்தில் கோரிக்கைகளை பெற நாம் நடத்தவேண்டிய, கட்டிக்காக்க வேண்டிய இயக்கத்தின் முக்கியத்துவத்தையும் பற்றியும்சிறப்புரையாற்றினார்.

## கோவைலைஸ்தொழிலாளர் போராட்டம் வெற்றி

கோவை, மார்ச். 17—

கோவை டவுனில் உள்ள பட்டேல்ரோடு கைவண்டி, லோடிங், அன்லோடிங் தொழிலாளர்கள், ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியனில் சேர்ந்து கூலி உயர்வுக்காக நோட்டீஸ் அனுப்பினர்.

தகராறுக்கு சம்பந்தப்பட்ட குழந்தைசாமி அன்கோ, கனனியப்பன் அன்கோ, சிவமணி அன்கோ, வெங்கடேஸ்வரா அன்கோ, ஆகிய கம்பெனியின் நிர்வாகஸ்தர்கள்எந்தவிதமான பேச்சு வார்த்தைக்கும் வராமல் வீணே காலம் கடத்தியதால் கடந்த 11—2—74ம் தேதி காலைமுதல் வேலை நிறுத்தத்தில் இறங்கினர்.

ஆனல், வேலைநிறுத்தம் 4மணி நேரமே நீடித்தது. ஏனெனில் மேற்கண்ட நிர்வாகம் உடனே பேச்சு வார்த்தைக்குவந்தது அன்று இரவே வேலை வாரியாக ஒப்பந்தம் நிர்வாகத்துக்கும் யூனியனுக்கும் இடையே ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தால் 50 சதம் முதல் 125 சதம் வரை கூலி உயர்வு ஏற்பட்டது.

# தோல்பதனிடும் தொழிலாளர் போராட்டம் வெற்றி

## தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பினர்

சென்னை, மார்ச். 14—

6—3—74 முதல் ஆறு நாட்கள் வேலை நிறுததம் செய்து வந்த மாதவரம் ஸ்ரீனிவாஸ் கம்பெனி தொழிலாளர்கள்12—3—74 முதல் வேலைக்குத் திரும்பியுள்ளனர்.

கடந்த பிப்ரவரியில் ஒரு நாள் வேலை நிறுத்தம செய்த தினத்தை லீவு தினமாகக் கருதவும் சம்பள உயர்வு சம்பந்தமாக இரண்டு மாதத்திற்குள் உடன்பாடு காணவும் அதுவரை மாதம் ரூ 30 விகிதம் நிவாரணம் தரவும் ஏற்கனவே ஒப்புக்கொண்டபடி அமுல் செய்யாததாலேயே இந்த ஆறுநாள் வேலை நிறுத்தம் நடைபெற்றது.

லேபர் ஆபீசர் ஆலோசனைப்படி ஏற்கனவே தொழிற்சங்கத்திடம் ஒப்புக் கொண்டபடி ஒரு நாள் சம்பளமும் நிவாரணத் தொகை ரூ. 30-ம் தர நிர்வாகம் சம்மதித்ததின் பேரில் வேலை நிறுத்தத்தை முடித்துக் கொண்டு வேலைக்கு திரும்பினர்.

தொழிற்சங்கத் தலைவர் சி. கே மாதவன் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. துணைத் தலைவர் து. வீரராகவன் பொதுச் செயலாளர் எம் சி. தேவன் ஆகியோர் பேசினர்.

# மைலே தியாகிகளின் நினைவுக்கு அஞ்சலி

மைலே கிராமத்தின் வெட்ட வெளியெங்கும் நினைவுக் கற்கள் நடப்பட்டிருக்கின்றன. அங்கு சாரி சாரியாக மக்கள் சென்று அஞ்சலி செலுத்தி வருகிறார்கள்.

தென் வியட்நாமிலுள்ள இந்தக் கிராமத்தில்தான் சரியாக இன்றைக்கு5ஆண்டுகளுக்குமுன் ஏகாதிபத்திய அமெரிக்கசிப்பாய்கள்புகுந்து நூறுக்கணக்கான வியட்நாமிய ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும் சுட்டுக்குவித்தார்கள்.

வியட்நாம் விடுதலைப் படையினருக்கு உதவுகிறார்கள் என்ற சந்தேகத்தின் பேரில்தான் ஒரு ஹெலிகாப்டர் விமானத்தில் அமெரிக்க சிப்பாய்கள் வந்து இறங்கினர். ரத்த தாகம எடுத்த அந்த ஓநாய்கள் யந்திரத் துப்பாக்கிகளைப் பயன்படுத்தி நிராயுதபாணிகளான வியட்நாம் மக்களைக் கொன்று குவித்தார்கள்.

இந்தக் கொடுமையைப் பார்த்து உலகெங்கும்கண்டனம் எழுந்தது. அமெரிக்க நாட்டிலேயே கடும ஆட்சேபம் எழுந்தது.

மைலேயில் பூத்த செம்மலர்களே! உங்களுடைய பெயர்கள் நினைவுக் கற்களில் மட்டும் பதிக்கப்பட்டிருக்கவில்லை. உலக மக்கள் நெஞ்சங்களிலெல்லாம் உங்களுடைய நினைவு நிலைத்திருக்கும்.

அமைச்சர்களுக்கு

# எடைக்கு எடை உமி

## மகாராஷ்டிர பெண்கள் குழு

# நூதனப் போராட்டம்

பம்பாய், மார்ச். 21—

அமைச்சர்களுக்கும், பிரமுகர்களுக்கும் எடைக்கு எடை தங்கம், வெள்ளி, வெங்காயம் என்று பொருட்கள் கொடுக்கப்படுவது உண்டல்லவா? மக்களை துன்பச் சுழலில் மூழ்கடித்துள்ள அமைச்சர்களுக்கு எடைக்கு எடை உமியை கொடுக்க மகாராஷ்டிர இடதுசாரிக் கட்சிகளைச் சேர்ந்த பெண்கள் போராட்டக்குழு முடிவெடுத்துள்ளது.

ஏப்ரல் 4-ந் தேதி பிரதமர் இந்திரா பூனா நகருக்கு வருகிறார். அவரது வருகையையொட்டி அன்றைய தினம் எடைக்கு எடை உமி அளிக்கும் விழா பம்பாய் நகரில் நடத்தப்படும்.

இதற்கான அழைப்புகள் அமைச்சர்களுக்கு அனுப்பப்பட்டுவிட்டன.

அமைச்சர்கள் வரவில்லை என்றால் அவர்களது உருவம் செய்து அதன் எடைக்கு எடை உமி நிறுத்து அமைச்சர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அரசு உணவு விநியோகக் கடைகளிலிருந்து விநியோகிக்கப்படும் அரிசியில் கலந்துள்ள உமி, அமைச்சர்களுக்கு பரிசளிப்பதற்காக திரட்டப்படுகிறது.

இதற்கான ஏற்பாடுகளை தோழர் அகலியா ரங்கனேக்கர் (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்) தோழர் மிரிணல் கோரே எம் எல் ஏ (சோசலிஸ்ட்) ஆகியோர் நடத்தி வருகின்றனர்.

கோட்டையை நோக்கி

# டான்சி தொழிலாளர் ஊர்வலம்

சென்னை மார்ச் 17—

தமிழகம்முழுமையுமிருந்து வந்த தமிழக அரசு சிறு தொழில் நிறுவன தொழிலாளர் 1500 பேர் கிண்டி ரயிலடியிலிருந்து ஊர்வலமாக புறப்பட்டனர். நூற்றுக்கணக்கான பெண் தொழிலாளர்களும் சேர்ந்து கொடுமையான வெய்யிலையும் பொருட்படுத்தாது விண்ணதிர கோஷமிட்டு செங்கொடி பிடித்து, வீரநடைபோட்டு, 7 மைல் சென்ற ஊர்வலக் காட்சி தொழிலாளர்களின் எழுச்சியை எடுத்துக் காட்டுவதாக இருந்தது.

தமிழகம் முழுமையுமிருந்து 28 யூனிட்டுகளின் தொழிலாளர்கள் பஸ்களிலும், லாரிகளிலுமாக கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்தனர். ஊர்வலத்தின் முன் தலைவர்கள் வி. பி. சித்தன், எ. நல்லசிவன், எஸ். எ. தங்கராசன், சி. பி. தாமோதரன் ஆகியோர் தலைமை தாங்கிச் சென்றனர்.

ஊர்வலம் கோட்டையை நோக்கிச் சென்றபோது காவல் துறையினர் கடற்கரை காந்தி சிலை முன் தடுத்து நிறுத்தி விட்டனர் சட்டசபை நடந்துகொண்டு இருப்பதால் போகக் கூடாது என்று கூறி பிரதிநிதிகள் மட்டும் அமைச்சரை பேட்டி காண அனுமதித்தனர்.

தலைவர்கள் வி பி சிந்தன் எ நல்லசிவம், எஸ் எ தங்கராஜன், சி பி தாமோதரன் எஸ். வரதன், சதாசிவம், நஞ்சப்பன். பொன்னுச்சாமி, அப்துல், ராஜகோபால், வி கே கோவிந்தசாமி, அங்கமுத்து, சின்னையா, பெருமாள்சாமி, ஆக 14 தோழர்களிடம் அமைச்சர் ராஜாராம் நேரில பேசி கோரிக்கைகள் கொண்ட மகஜரை பெற்றுக் கொண்டார்,

விரைவில் சமரசம் செய்து வைக்க உத்திரவிடுவதாகக் கூறியதுடன், 'சமரசத்திற்கு வருவீர்களா' என்று போகிற போக்கில் அமைச்சர் கேட்டும் வைத்தார்.

### தோழர் வி பி சி பேச்சு

அதன்பின் ஊர்வலமாக வந்த தொழிலாளர் மத்தியில் பேசிய தோழர் வி.பி. சிந்தன அமைச்சரைக் கண்டு பேசிய விவரங்களை எடுத்துக்கூறினார் நமது வரலாற்றில் பேட்டி கண்டு கோரிக்கை வாங்கியது இல்லை என்றும் நமது பக்கம் உள்ள நியாயத்தை எடுத்துக் கூறவே இம்முறை பேட்டி காண வந்தோம் என்றும் கோரிக்கை பெற உழைக்கும் கரங்கள் ஒன்று திரண்டு முஷ்டி உயர்த்துவதே வழி என்றும் கூறி முடித்தார்.

...ல்பாறையில்

# தி.மு.க. ரௌடித்தனம் கண்டன ஊர்வலம்

பொள்ளாச்சி, மார்ச். 20—

பொள்ளாச்சி தாலுகா வால்பாறையில் 17-3-74ம் தேதியன்று கண்டன ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

கடந்த 1.3-74-ம் தேதி. பரம்பிக்குள்ளம் ஆளியாறு திட்டப்பகுதியிலுள்ள அப்பர் ஆளியாரில் திமுக ரௌடிக் கும்பல், சி ஐ டி யு சங்க முக்கியஸ்தர்களான துளசிதாசன் ஸ்டீபன் ஆகியோரை கடுமையாக தாக்கியதையும் போலீஸ் அதிகாரிகளும், மின்வாரிய அதிகாரிகளும் மருத்துவ அதிகாரியும் பாரபட்சமாக நடந்துள்ள விபரங்கள் முழுவதையும் குறிப்பிட்டு நியாயமான நடவடிக்கை கோரி முதலமைச்சருக்கு சிஐடியூ தலைவர் தோழர் கே.ரமணி அனுப்பியிருந்த கடிதம் ஏற்கனவே தீக்கதிரில் வெளியானது தெரிந்ததே.

மேற்கண்ட ரௌடித் தாக்குதலைக் கண்டித்தும் தி மு க சங்கத்தினரின் கையாள் போல நடந்து கொண்ட வால்பாறை மருத்துவ அதிகாரியின் ஆணவப்போக்கை கண்டித்தும் ஒருதலைப்பட்சமான நடவடிக்கை எடுத்ததின் மூலம் தி மு க வினரின் ஏஜெண்டுகளாக மாறியுள்ள போலீஸ் நடவடிக்கையைக் கண்டித்தும் வால்பாறையில் கண்டன ஊர்வலம், பொது கூட்டமும் நடக்கப்பட்டன மின்சார அணைக்கட்டு தொழிலாளர் சங்கமும் பொதுப்பணித் துறை தொழிலாளர் சங்கமும் தோட்டத் தொழிலாளர் சங்கமுமான சிஐடியூ சங்கங்களின் சார்பிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலும் ஏராளமான தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

### பொதுக்கூட்டம

ஸ்டாப் கிளப் மைதானத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு தோழர் கே. ராமசாமி தலைமை வகித்தார். அணைக்கட்டு சங்கத்தை சேர்ந்த தோழர் கே.கே. தாஸ் தோட்டதொழிலாளர் சங்கத்தைச்சார்ந்த தோழர்கள் சி. கே கிருஷ்ணன் குட்டி, தங்கராஜ் பொதுப் பணித்துறை தொழிலாளர் சங்க தோழர் வி. கே பால்ராஜ் ஆகியோர் பேசியபின் மார்க்சிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர்கள் கே. சி கருணாகரன், எம். கோவிந்தன் ஆகியோர், திமுக வினரின் ரௌடிசத்தையும், போலீஸின் ஒருதலைபட்ச நடவடிக்கைகளையும் மின்வாரிய அதிகாரிகளின் போக்கையும் மருத்துவ அதிகாரியின் துரைத் தனத்தையும் அம்பலப்படுத்தியதோடு நாடு முழுவதும் நடைபெற்று வரும் அரசியல் போராட்டங்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சி, சி ஐ டி யூ ஊழியர்கள், தலைவர்கள் ஏற்றுக்கொண்டுள்ள தியாக விழுப்புண்களையும், எதிரிவர்க்க அரசியல் சாகஸங்களையும் விளக்கிப் பேசியதோடு இந்த ரௌடித் தாக்குதலுக்கெதிராக அனைத்து மக்களும், தொழிற்சங்கங்களும் அரசியல் கட்சிகளும் தங்களின் கண்டனங்களை தெரிவிக்கக் வேண்டுமென கேட்டுக் கொண்டனர்.

கூட்டத்தின் முடிவில் கண்டன தீர்மானம் ஒன்றும் நிறைவேற்றப்பட்டது

# எதிர்த்திட முனைந்துவிட்டால்

—க. சொக்கலிங்கம—

(தேசுமுகிப்பேட்டை)

பொங்கும் மகிழ்ச்சியினால் எதிர்காலம்
பொற்காலம் ஆகுமென்று கனவு கண்டே...
அய்யோ!
எங்குமிலா "இட்லரிசம்" இந்நாட்டில் வந்ததம்மா
ஏழைச் சிறுவர்களும் ஏங்கித் தவிக்குதம்மா!
அங்குமிங்கும் அலைகின்ற கைபூட்டுக் கோலங்க...
யாரிடத்தில் போய்ச் சொல்வேன்
தாயே! எந்தமிழே!
சங்கத் தமிழினம் செழிப்போங்க இம்மண்ணி...
புரட்சி மணம் பரப்பப் புறப்பட்டேன்
எனைவாழ்த்து

பதவியும் பணமும் தேடிப்
பாரினில் திரியும் கூட்டம்
இதமுடன் பேசிப் பழகி
எதை எதையோ செய்து காட்டி
நிதம் நிதம் பெருளைச் சேர்க்கும்
நிலையினை மாற்ற நாமும்
புதியதோர் புரட்சி செய்வோம்;
எதிர்காலம் புதுமை செய்வோம்!

கூழுக்கு வழியின்றி
கும்பிட்டு வணங்குவோனை
கோழையென எண்ணுகின்றார்
கொடுமை பல செய்கின்றார்
ஏழையும் வீறுகொண்டு
எதிர்த்திட முனைந்துவிட்டால்
நாளையே அரசு மாறும்
நமதாகும் எதிர்காலங்கள்

பாடுபடும் தொழிலாளி உணவைத் திருடி
பகட்டான பட்டாடை அணியும் பேர்கள்
காடுவெட்டி, கழனியாக்கி வியர்வைசிந்தும்
உழவர்களின் வாழ்வுக்கு உலைவைப்போர்கள்
கேடுகெட்ட மானிடர்கள்—இவர்களாலே
கெட்டுநொந்த தொழிலாளர் வர்க்கமெல்லா...
பீடுற்றுகிளர்ந்தெழுந்து புரட்சி செய்து
பொதுவுடைமைச் சமுதாயம்
அமைத்தல் வேண்டும்.

(திருக்கழுக்குன்றத்தில் சென்ற 24-11-73-ந் தேதியன்று "இந்திய அறிவியல்கழகத்"தின் சார்பில் நடைபெற்ற கவியரங்கத்தில் "எதிர்காலம்" என்னும் பொரு...ளின் கீழ் பாடப்பட்ட கவிதை.)

# முதலமைச்சர்கள் மாநாடு கொள்ளை லாபக்காரர்களை கொழுக்க வைக்கும் முயற்சியே

புதுடில்லி, மார்ச். 18—

புதுடெல்லியில் நடைபெற்ற முதலமைச்சர்கள் மாநாட்டில் ஒரு சிலமாநில முதல்வர்களைத் தவிர, மற்ற மாநிலமுதல்வர்கள் அனைவரும் கோதுமையின் விலையை கூட்ட வேண்டும் என்றும் கொள்முதல் செய்வதில் தனியார் வியாபாரிகளையும் அனுமதிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தியுள்ளனர்.

### விலையை கூட்டுவதில் போட்டி

ஏற்கெனவே, விவசாயப் பொருட்களின் விலை நிர்ணயிப்புக் குழு, கோதுமைக்கு தற்போதுள்ள விலையைக் காட்டிலும் 10 சதவீதம் கூட்ட வேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளது,

அதற்குப்பின், தேசிய உணவுப் பொருள் ஆலோசனைக்குழு, கோதுமையின் கொள்முதல் விலையை விவசாயப் பொருட்களின் விலை நிர்ணயிப்புக் குழு கோரிய விலையைக் காட்டிலும் அதிகமாகக் கூட்டவேண்டும் என்று என்று வலியுறுத்தியது.

இப்படியாக அரசாங்கக் கமிட்டிகள் போட்டி போட்டுக் கொண்டு கோதுமை விலையை மேலும் மேலும் உயர்த்திட வலியுறுத்தி வந்தன.

இதே போட்டியில் முதல் அமைச்சர்களின் மாநாடும் பின் தங்கவில்லை.

### தங்கு தடையின்றி

இம் மாநாட்டில் மாநில முதலமைச்சர்கள் வலியுறுத்தியதின் காரணமாக ஒரு குவிண்டால கோதுமை ரூ 105 என்ற விலை யமத்திய அரசு அனுமதிக்கலாம் என்று கூடத்தெரிகிறது.

நிலப்பிரபுகளுக்குச் சாதகமான விலை உயர்வுக்கான கொள்கைகள் அரசாங்க இயந்திரத்தை பொறுத்தரையில் தங்கு தடையின்றி எவ்விதச்சிக்கலும் இல்லாமல்முன்னேறிவருகின்றன.

### தேவை என்பதால் அல்ல

மேலும், பெரும்பாலான முதலமைச்சர்கள், அரசின் மொத்த தானிய வியாபாரக் கொள்கையை கடுமையாகத்தாக்கியுள்ளனர். வரக்கூடிய ராபி பருவவிளைச்சலில் அரசாங்கக் கொள்முதலுக்கு பதிலாக, தனிப்பட்ட மொத்த வியாபாரிகளையும், தரகர்களையும் கொள்முதல் செய்ய அனுமதிக்கலாம் என்று வலியுறுத்தியுள்ளனர்.

ஒரு சில பற்றுக்குறை மாநில முதல்வர்கள மட்டும், தானியக் கொள்முதல் அரசாங்கத்தால் நடத்தப்பட வேண்டும் என வற்புறுத்தியுள்ளனர். அதுவும் கூட தங்களது மாநிலங்களுக்கு மத்திய அரசாங்கத்திடமிருந்து தானியம் பெறவேண்டுமானால் அரசாங்கக் கொள்முதல் தேவை என்ற அடிப்படையில் தான் அம் மாநில முதல் அமைச்சர்கள் அரசாங்ககொள்முதலை வற்புறுத்தினரேயொழிய அகில இந்திய ரீதியில் தேவையான ஒரு கொள்கை என்பதற்காக வற்புறுத்தவில்லை,

### பிரதமரின் மௌனம் ஏன்?

மேலும் இம்மாநாட்டில் வரக்கூடிய ராபி பருவத்தில ஒவ்வொரு மாநில அரசும், மத்திய அரசும் எவ்வளவு கொள்முதல் செய்வது என்பது பற்றியும் முடிவு செய்யப்படவில்லை. தனியார் தானிய வியாபாரத்திற்கு இது அடிப்படையாக இருக்கக்கூடும்.

மேலும், முதலமைச்சர்கள் மாநாடு நடைபெறுவதற்கு முன்பு முதலமைச்சர்கள் இந்திரா அம்மையாரை சந்தித்துப் பேசியுள்ளனர்- அப்பேச்சில்பெரும்பாலான முதலமைச்சர்கள் அரசாங்க தானிய வியாபாரத்தை கடுமையாகத் தாக்கியுள்ளனர். பிரதமர் இந்திராகாந்தியும், முதலமைச்சர்களின் அரசாங்க கொள்முதல் எதிர்ப்புக்கு எவ்வித மறுப்பும கூறவில்லையாம். முற்போக்கு நாடகத்தையெல்லாம் எங்கோ வைத்து விட்டார் போலும்.

### வார்த்தை ஜாலங்கள்

தேவைக்கு மிஞ்சிய உபரித் தானியத்தை பதுக்கி வைக்கும் நிலத் திமிங்கலங்களை நெருக்கிப்பிடித்து கொள்முதல் செய்ய முடியாத ஆளுங் கட்சியினர், அரசாங்க கொள்முதலைக் கைவிட வேண்டும் என்று பேசியுள்ளனர். தனியார்களிடம தானிய வியாபாரத்தை விட்டுவிட வேண்டு மென்றுர்களாம்.

இப்பிற்போக்கு நடவடிக்கையை "ஆக்கபூர்வமான நடைமுறைக்குந்த அணுகு முறை" என்று கூறி வார்த்தை ஜாலவிளையாட்டு நடத்துகின்றனர்.

### நிகழ்ச்சிகளின் போக்குகள்

முதலமைச்சர்கள் மாநாட்டிற்கு முன்பாக நடைபெற்ற தேசிய உணவு ஆலோசனைக்குழுக் கூட்டத்தில் கோதுமைக் கொள்முதல் விலையை அதிகரிக்கவேண்டும் என வற்புறுத்திய போது அக் குழுவின தலைவரான மத்திய விவசாய அமைச்சர் பக்ருதின் முகமது அலி அவ்வற்புறுத்தலுக்கு எவ்விதமறுப்பும் எதிர்ப்பும தெரிவிக்கவில்லை:

மாநில முதல் அமைச்சர்கள் மாநாட்டின் போது பெரும்பாலானமுதல்அமைச்சர்கள் மேலே கூறப்பட்ட தேசிய உணவு ஆலோசனைக் குழுவின் ஆலோசனையை வற்புறுத்தியபோதும் பிரதமர் இந்திரா அம்மையாரும் எவ்வித மறுப்பும் எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை.

எனவே நிகழ்ச்சி போக்குகள் தானிய வியாபாரம் தனியார் வர்த்தக சூதாடிகளிடம் முழுமையாக ஒப்படைக்கப்படுமென்றே தெரிகிறது,

### அம்மையாரின் குறிக்கோள்

ஆனால் அதை எப்படிச் செய்வது என்பதுதான் மத்திய அரசுக்கு உள்ள தர்ம சங்கடமான பிரச்சினை. இப்படிச் செய்து விட்டால், தங்களது போலித்தனமான முற்போக்கு வேடம் கலைந்து விடுமே என்ற ஒரு அச்சம் உணர்வு இருக்கலாம்.

எது எப்படியாயினும் நிலப்பிரபுகளுக்கு சாதகமான விலை உயர்வின் அனுகூலம் ஏழை, மத்திய விவசாயிகளுக்கு கிட்டாதபடி அவர்களை சூறையாடும் வர்த்தகச் சூதாடிகளை தானிய வியாபாரத்தில் அனுமதிக்கப்படுவதும் நிச்சயம்.

ஏனெனில் எந்த ரூபத்திலாவது நிலப்பிரபுக்களையும், வர்த்தகச் சூதாடிகளையும் கொழுக்க வைப்பது என்பது இந்திரா அம்மையாரின் சோசலிசக் குறிக்கோள்களில் ஒன்றல்லவா?

# செவ்வாய் மண்டலத்தில் காண்பது என்ன? மனிதன் செல்வது சாத்தியமா?

மாஸ்கோ, மார்ச் 1—

பூமியிலிருந்து வெள்ளிக்கும், செவ்வாய்க்கும தன்னியக்கக் கோள்கள் பல ஏவப்பட்டு, அவை அக்கோள்களைப் பற்றிய பல விவரங்களைக் கொடுத்துள்ளன. நீண்ட நெடுங் காலப் பயணததைத் துவங்குவதற்கும் நெடுநதூரததிலிருந்து செய்திகளை அனுப்புவதற்கும் ஆன பல விசேஷ உத்திகளும், கருவிகளும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

### புகைப்படம்

செவ்வாய்க் கோளின் வாயு மண்டலம், தட்ப. வெப்ப நிலை ஆகியவை பற்றிய விபரங்களை, சோவியத. அமெரிக்க தன்னியக்க ஆய்வு கலன்கள் ஆராய்ந்து அறிவித்துள்ளன அக்கோளின் மேற்பரப்புகுறித்த விவரங்களும், புகைப்பட வடிவில் நமக்குக் கிடைத்துள்ளன. செவ்வாய்க் கோளில் கடுமையான நிலைகள் இருப்பதாக நமக்குத் தெரிய வந்துள்ளது. அங்குள்ள வாயு மண்டலம் மிகவும் அடர்த்தி குறைந்தது, மிகக்குளிர்ச்சியானது. அதில ஆக்ஸிஜனோ, நீரோ கிடையாது. செவ்வாய்க் கோளின் மேற்பரப்பு, சந்திரனுடையதைப் போன்று பல வெடிப்புக்களைக்கொண்டதாக உள்ளது. சிவந்த-பழுப்பு நிற மணலால் அது மூடப்பட்டுள்ளது- செவ்வாய்க் கோளின் ஆகாயத்தில் பிரகாசிக்கும் சூரியன். மிகச் சிறியதாக உள்ளது. அதுதரும வெம்மையும் மிகக் குறைவே.

### பயணம் சாத்தியமே

என்றாலும், இவையனைத்தும். செவ்வாய்க் கோள் பயணத்திற்குத் தீவிரத் தடைகள் அல்ல, இதைவிட மோசமான சூழ்நிலைகளிலும், மனிதனது ஜீவாதாரக் கிரியைகளைக் காக்கும் திறன் படைத்த விசேட விண்வெளி உடைகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன,

மனிதன் செவ்வாய்க் கோளுக்கு விஜயம் செய்து திரும்பினால், அக்கோளைப் பற்றிய பற்பல விவரங்களையும அவன் நேரில் கண்டு வருதல சாத்தியமே.

இதுகாறும்கருதிவந்ததைப் போல, செவ்வாய்க் கோள், உயிரினமற்ற ஒரு ஜடக் கோள்தானா? அல்லது அங்கு நமது பூமியிலிருப்பதைப் போன்றுஇல்லையெனினும், மாறுபட்ட வேறுவகை உயிரினங்கள் வாழ்ந்த தடயங்களேனும் நமக்குக் கிட்டுமா? இத்தகைய கேள்விகளுக்கு விடையளிப்பதற்கு மனிதன் அங்கு சென்று வருவதே சிறந்ததாகும்.

ஒருவேளை செவ்வாய்க் கோளின் வளர்ச்சி முழுமையடைந்து முற்றுப் புள்ளி பெற்றிருக்கக் கூடுமோ? அதன் காரணமாக, அது குளிர்ச்சியடைந்து, தனது வாயு மண்டலத்தின் ஒரு பகுதியை இழந்திருக்குமோ பத்து, நூறு, லட்சம ஆண்டுகளுக்கு முன்னர், அக்கோளில் கடல்களும், நதிகளும், மலைகளும் பள்ளத்தாக்குகளும். நூதனமான காடுகளும் பரவிப் பெருகி இருந்தனவா? அவை மட்டுமின்றி, வானளாவிய கட்டடங்களும் சுவடு தெரியாது அழிந்துபட்ட நகரங்களும் கூட இருந்தனவா? அவற்றின் தடயங்களை கண்டு பிடிக்கமுடியுமா?

இவையெல்லாம் நாம் அறிந்து கொள்ளத் துடிக்கும் கேள்விகள். அப்படியானால் செவ்வாய்க் கோள் பயணத்திற்கு இன்னும் மனிதன் தேதி குறிக்காதது ஏன்?

### நீண்ட நெடிய பயணம்

செவ்வாய்க் கோளுக்கு மனிதன் விஜயம் செய்வதற்குப் பிரதான தடையாக இருப்பது, பயண காலம் மிக நீண்டிருப்பதே. பூமிக்கும் செவ்வாய்க்கும் இடையேயுள்ள தூரம் 4 கோடியிலிருந்து 24 கோடி மைல்கள் வரை வேறுபடுகிறது.

அதாவது பூமியும் செவ்வாயும் நெருங்கி வரும்போது உள்ள குறைந்தபட்ச தூரம் 4 கோடி மைல்களாகும்.

குறுகிய பயண தூரத்தையும் குறைந்த பட்ச எரிபொருள் பயனீட்டையும் நிர்ணயித்து விடுதல் சாத்தியமே; மிகவும் சிக்கனமான, அதாவது குறைந்த பட்ச சுழல் பாதையில் செவ்வாய் கோளுக்குப் பயணத்தை மேற்கொள்ள வேண்டுமானால், அத்தகைய காலம் 2½ ஆண்டுகளுக்குஒரு முறை ஒரு சிலதினங்களே நீடிக்கிறது. அதிலுள்ள சிக்கல் என்னவெனில், பூமியிலிருந்து புறப்பட்டு செவ்வாய் கோளை அடைவதற்கு 259 தினங்கள் ஆகின்றன. திரும்பி வருவதற்கும் அதே அளவுகாலம் ஆகும். ஆனால் 259 தினங்களில் பூமியை வந்தடையுமாறு செவ்வாய் கோளிலிருந்து பயணக் குழுவினர் புறப்படவேண்டுமெனில், அவர்கள் அங்கு 450 தினங்கள் தங்கவேண்டும். அப்படியானால் ஒரு ஒருமுறை பயணம் சென்று வர 968 நாட்கள் அதாவது 2½ ஆண்டுகள் ஆகும்.

இரு கோள்களின் சில குறிப்பிட்ட நிலைகளைப் பொறுத்து பயணகால கட்டத்தை சற்று குறைப்பதும் சாத்தியமே. அத்தகைய தொரு வாய்ப்பு 1981-ம் ஆண்டில் கிட்டும்.

பூமியிலிருந்து செவ்வாய் கோளுக்கான மனிதர்களுடன் கூடிய ஆய்வுக் கலன் 1981 டிசம்பர் 28 ஆம் நாள் செலுத்தப்பட வேண்டும். அக்கலன் 220 தினங்கள் கழித்து, அதாவது 1982 ஆகஸ்டு 4-ம் தேதி செவ்வாய் கோளைச் சுற்றிய சுழல் பாதையில் நுழையும். அச் சுழற்பாதையிலிருந்து தனியொரு கூட்டில் செவ்வாய் கோளில இறங்கி தங்கள் ஆய்வுகளை நடத்தி முடித்து மீண்டும் சுழல் பாதையிலுள்ள தாய்க் கலனுக்கு அவர்கள் வந்து சேர 20 தினங்கள் உள்ளன. ஆகஸ்டு 24, 1982-ல் அவர்களது பயணம் அங்கிருந்து பூமியை நோக்கித் தொடங்கப்பட்டால் 1983 மார்ச 29-ம் தேதியன்று அக்கலன் பூமியை வந்தடையலாம். இந்தப் பயணத்தில் மொத்தம் 456 தினங்கள் ஆகின்றன.

இவை தவிர, வைத்திய உளவியல் பிரச்னைகளும் பல உள்ளன. மற்றொரு பிரச்னை, இந்த பிரம்மாண்டமான ஆய்வு கலனை விண்வெளியில் எப்படி ஏவுவது என்பதாகும். ஏனெனில் பூமி சுழற்பாதையில் செலுத்தப்படும் அத்தகைய ஆய்வு கலனின் எடை, சில நூ... டன்கள் இருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது.

அத்தகைய விண்கலை ஏவுவதற்குப் போதிய விசை தற்போது கிடையாது. பூமியைச் சுற்றிய சுழல் பாதையிலேயே பல்வே... கூண்டுகளைக் கோர்த்திணைப்பது அவசியமாகும்.

எனவே, மனிதனது செவ்வாய் கோள்பயணம் ஆரம்பமாவதற்கு முன்னர் தீர்க்கப்பட வேண்டிய பிரச்னைகள் ஆயிரம் உள்ளன.

### சென்னை ஓட்டல்...

(2ம் -பக்கத் தொடர்ச்சி)

திற்கு பிறகு செயலாளர் அறிக்கையும் வரவு- செலவு கணக்குகளும் ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.

தற்பொழுது நடைபெற்று வரும் போராட்டங்களை ஆதரித்தும் ஆட்சியாளர்களின் தொழிலாளர் விரோத கொள்கைகளை கண்டித்தும், ஓட்டல் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய கமிட்டி அமைப்பதில் காலதாமம செய்துவரும் அரசின் கொள்கைகளை கண்டித்தும் தோழர் எஸ். வெங்கடராமன் கொண்டு வந்த தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

இந்த ஆண்டு நிர்வாகிகளாக கீழ்காணும தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர், தோழர் கிருஷ்ணமூர்த்தி—தலைவர் கெ, எம். அரிபட்—உதவி தலைவர் பி-ஜி.கெ. கிருஷ்ணன்—செயலாளர் ஏ. கே. பத்மனுபன். ஏ, கிருஷ்ணன்—உதவி செயலாளர்கள், என். வெங்கட்ராமன்—பொருளாளர்.

செயலாளர் நன்றி கூறிய பின் கூட்டம் முடிவடைந்தது.

### தமிழ்நாடு விவசாய பொருட்கள்...

சென்னை, மார்ச். 1...

கடந்த ஆண்டை (73—75) காட்டிலும் இவ்வாண்டு (74—73) விவசா... பொருட்களின் விளைச்ச... 3.1 சதவீதம் அதிகம... எதிர்க்கப்படுவதாக தமி... விவசாய அமைச்சர் சட்ட... சபையில் தெரிவித்தார்.

கடந்து ஆண்டு விளைச்... லில் அரிசி 57 லட்சம் ட... னும், சோளம் 15 லட்ச... டனனும், பருப்புகள் 2.10 லட்... சம டனனும் பருத்தி 0.... லட்சம் டனனும் எண்ணெ... விததுகள் 11·50 லட்ச... டன்னும் விளைந்திருப்பதா... விவசாய அமைச்சர் குறி... பிட்டார்,

இவ்வாண்டிற்கா... விளைச்சலில் அரிசி ... லட்சம டன்னும் சோள... 15.76 லட்சம் டன்னு... பருப்புகள் 2.30 லட்ச... டன்னும் வெல்லம் 11.... லட்சம் டன்னும் பருத்... 0.76 லட்சம் டன்னு... எண்ணை விததுக்கள் 12.... லட்சம டன்னும்—அதாவ... கடந்த ஆணடு விளைச்ச... விட 3.1 சதவீத அதிகவிளை... சல் எதிர்பார்க்கப்படுகி... தம்.

# ...தமிழகமெங்கும் ...சி தொழிலாளர்களின் ...கோரிக்கை நாள்

சென்னை, மார்ச் 18—

...சென்னையில் கூடிய தமிழக சிறு தொழில் நிறுவன ...ழிலாளர்கள் (டான்சி) சிறப்பு மாநாட்டில் ஏப்ரல் ...ம்தேதி யன்று தமிழக மெங்கும் கோரிக்கை நாள் ...னுஷ்டிப்பதென்று முடிவெடுக்கப்பட்டுள்ளது.

...நேற்று காலை 10மணிக்கு ...மிழக சிறு தொழில் நிறு...ன தொழிலாளர் சம்...மேளனத்தின் சிறப்பு ...ாநாடு தோழர் சி கோவிந்...ராஜன் தலைமையில் துவங்...யது. தலைவரே தியாகி...ள் தீர்மானத்தை முன்...மொழிந்தார். 2 நிமிடம் ...ிரதிநிதிகள் எழுந்து நின்று ...ீர வணக்கம் செலுத்தி...னர்.

## ...பி. தாமோதரன்

...தோழர் சி பி தாமோத...ன் வரவேற்புரை நிகழ்த்தி...னார். வரவேற்புரையின் ...போது தமிழக தொழிற்...சங்க இயக்கப் பிரதிநிதி...களை வரவேற்பதில் சென்னை ...தொழிலாளர்கள் பெருமை ...அடைவதாகவும், 'உங்க...ளின் வரலாறு மிக்க அனுப...வத்தை எங்களுக்குத் ...தாருங்கள். கட்டம்புரளாத ...பாட்டாளி வர்க்க பாதை...யில் நின்று முன்னேறு...வோம்!' என்று கூறி அனை...வரையும் வரவேற்றார்.

## ...கோவிந்தராஜன்

...தலைவர் தோழர் சி ...கோவிந்தராஜன் தன் முன்...னுரையில் "மாநாட்டில்முன் ...னு தாரணமாக இருக்க ...வேண்டிய அரசு ஊழியர்...களின் வாழ்க்கை நிலையா...னது பின்னடைந்த நிலையில் ...இருப்பது அரசின் அவல ...நிலையை எடுத்துக் காட்டு...கிறது.

...ஊழியர்களுக்கு சம்பளம் ...பஞ்சப்படிஉயர்த்தும்போது ...மாநில அரசை கேட்டு...தான் மத்திய அரசு செய்ய ...வேண்டுமாம்.

...இன்று கருப்புச்சந்தைகா...ரர்கள் தங்களின் தொந்தி...யைப் பெருக்க விலையை ...உயர்த்தி கொள்ளை லாபம் ...அடிக்கின்றனர். மறு பக்...கம் மத்திய மாநில ...அரசுகள் மேலும் மேலும் ...புதிய வரிகளை சுமத்தி ...நாட்டை சுரண்டும் கூட்டத்...தின் வேட்டைக் காடாக்கி ...வருகின்றது. இதை ...எதிர்த்து இந்திய தொழி...லாளி வர்க்கம் போராடி...னால் யானைப் பசிக்கு ...சோளப் பொரியை! தரு...வது போல் பஞ்சப்படி ...உயர்வு தந்து மத்திய அரசு ...சுரண்டும் கூட்டத்திற்கு ...துணை போகின்றது.

...இத்தகைய மக்கள் ...விரோத கொள்கையை ...எதிர்ப்பதற்கு வக்கற்ற ...மாநில அரசின் அமைச்சர்...கள் உழைக்கும் மக்கள் ...போராடிப் பெறும் பஞ்சப்...படியை தர முதலமைச்சர்...களின் சம்மதம் பெறவேண்...டும் என்று கூறி, வர்க்க ...பாசத்தோடு தொழிலாளர் ...விரோத கொள்கையை ...காட்டியுள்ளார்கள்.

...ஒன்று திரண்டு போராடு...வது மூலமாகவே நமது ...பிரச்சனைகளை தீர்க்க முடி...யும் என்று குறிப்பிட்டார்.

## ...ப. காசிநாதன்

...அடுத்து 17 அம்சக் ...கோரிக்கைகளை செயலா...ளர் தோழர் ப காசிநாதன் ...விளக்கிப் பேசினார். நமக்கு ...எதிராக அரசு என்ற முத...லாளிக்கு ஆதரவாக ஒரு ...எடுபிடி சம்மேளனத்தை ...தி மு க தலைமையில் வைத்...துக்கொண்டு போராட்டங்...களைபகிரங்கமாக காட்டிக் ...கொடுத்து வருகின்றது ...அரசு. அரசுக்கு வேறு ...திறமை இருந்தாலும் இல்...லாவிட்டாலும் தொழிலா...ளர்களை வஞ்சிக்கும்திறமை ...உண்டு என்று கூறி, ...இதை முறியடித்து நாம் ...இதர தொழிலாளிகளைப் ...போல் முன்னேற ஒன்று ...திரண்டு நின்று நமது ...சம்மேளனத்தை பலம் ...வாய்ந்த ஸ்தாபனமாக ...கட்டி போராடியாக வேண்...டும் என்றார்.

...தீர்மானங்களை முன்மொ...ழிந்தும் வழிமொழிந்தும் ...பிரதிநிதி தோழர்கள் பேசி...னர்கள். பிரதிநிதி தோழர்...களின் விவாதங்களுக்கு ...விளக்கம் தந்து தோழர் எஸ், ஏ, தங்கராஜன் (திண்டுக்கல்) பேசினார்,

## ஐந்து ஆண்டு பாவ மூட்டையை நாம் சுமந்தது போதும்

கழக அரசின் கயமை தனத்தால் பிரித்தாளும் சதிக்கு நமது தொழிலாளர்கள் இரையாகி செய்த ஒப்பந்தத்தின் காரணமாக நாம் ஐந்து ஆண்டு காலமாக இந்த கொடுமைகளை எல்லாம் தாங்கி வந்துள்ளோம். எது கேட்டாலும், ஒப்பந்தத்தை நிர்வாகம் நீட்டுகிறது. அதிகாரிகளும் அதைத்தான் எடுத்ததற்கெல்லாம் தூக்கிகாட்டி மட்க்கி வருகின்றனர்,

ஐந்து ஆண்டுகளுக்குப் பினனும் நிரந்தரமில்லை—கிரேடு என்பது அவர்கள் சட்டமாகி விட்டது. இது வெந்துநொந்து போன புண்ணில் வேல் பாய்ச்சுவதாகும்.

பட்டதெல்லாம் போதும் இனிபட முடியாது துயரம் என்று நிமிர்ந்து எழுந்து விட்டோம். உறுதியாக நின்று சம்மேளனத்தின் முடிவில் புதிய ஒப்பந்தம் காண்போம், போராட்டத்தின் மூலம் அதை அடைவோம் இவ்வாறு தோழர் எஸ். ஏ. தங்கராஜன் பேசினார்,

## முடிவுகள்

தோழர் ஏ. நல்லசிவம் அவர்கள் இறுதியாக முடிவுகளை அறிவித்தார்கள்.

1. வரும் 1—4—74ம் தேதி தமிழ்நாடு தழுவிய கோரிக்கை நாள் சிறப்பாக நடத்துவது.

2. சம்மேளன பிரதிநிதிகளிடம் நான் அரசு கோரிக்கைகளுக்கு சமரச தீர்வு காண வேண்டும் என்பதை வலியுறுத்தி கையெழுத்து இயக்கம் நடத்தி சம்மேளனத்துக்கு கையெழுத்து மகஜர்களை அனுப்பி வைப்பது.

3. இன்று முதல் நாம் விதிப்படிதான்வேலைசெய்ய வேண்டும். நிர்வாகத்தின் நிர்ப்பந்தத்திற்காகவோவரு வாய்க்காகவோ ஒப்பந்த வேலையோ கூடுதல் நேர வேலையோசெய்யக்கூடாது.

என்று மாநாடு ஏகமனதாக தீர்மானிக்கிறது. என்று கூறியதும் பிரதிநிதி தோழர்கள் பலத்த கரகோஷத்தின் மூலம் இதை வரவேற்றார்கள்.

## தீர்மானங்கள்

1 ஏற்கனவே கோரிக்கையாகவுள்ள 17 அம்ச கோரிக்கையை இந்த மாநாடு வலியுறுத்துகிறது. உடன் நிறைவேற்றித்தர கோருகிறது.

2 மதுரை தொழிலாளர் நீதி மன்றத் தீர்ப்புப்படி, தொழிலாளர்களுக்கு வாராந்திர விடுமுறை நாள் ஊதியம் தரப்பட வேண்டும். இதை அமுல் நடத்த மறுப்பது அநாகரீகமாகும்.

3 தரப்படும் பஞ்சப்படியை கணக்கிடும் போது தகுதியுள்ள மாத பஞ்சப்படியையும் தராமல், தருவது அநீதியாகும். விதிப்படி உயர்ந்த காலத்திற்கும் கொடுபட வேண்டிய பஞ்சப்படியையும் தரும்படி கோருகிறது.

4. விலை உயர்வால் வாழ்க்கைத் தரம் தாழ்ந்துள்ளது. மறுபுறம் நமது நாடு சுரண்டும் கூட்டத்தின் வேட்டைக் காடாகி வருகிறது. எனவே விலை ஏற்றத்தை குறைக்கும்படி மாநாடு கோருகிறது.

5. உறுதியாக நின்று பிளவு சக்திகளை முறியடித்து வேலைநிறுத்தம் செய்து வரும் பேசின் பிரிட்ஜ் மின்சார தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவிக்கிறது,

6. சிறு தொழில் நிறுவனங்களில் பகிரங்கமாக ஊழல் நடைபெற்று வருகிறது. இதை எழுத்து மூலமாக மானேஜிங் டைரக்டருக்கு புகார் செய்தும் இது பற்றி எந்தவித விசாரணையும் இல்லை. நடவடிக்கையுமில்லை. தொடர்ந்து பல யூனிட்டுகளில் பல ஆயிரக் கணக்கில் சொத்துக்கள் கொள்ளை யடிக்கப்பட்டு வருவதை அரசுகவனத்திற்கு கொண்டுவருவதுடன் உடன் அரசுஉடைமையை பாதுகாக்கக் கோருகிறது.

வரவேற்புக்குழு செயலாளர் தோழர் சி. பி. தாமோதரன் நன்றிகூற மாநாடு மாலை 5 மணிக்கு முடிவடைந்தது.

# அமுல்படுத்த கோரிக்கை

ஈரோடு, மார்ச். 20—

ஈரோடு நகரத்தில் ஓட்டல், பாக்டரி உள்பட அனைத்து நிறுவனங்களிலும் ஷாப்சட்டம் ஓட்டல் சட்டம் அமுல் படுத்தப்பட வில்லை,

மேற்படி சட்டங்களை அமலாக்கும் பொறுப்பிலிருக்கும் தொழிலாளர் நல அதிகாரிகளே எந்த நடவடிக்கையும் எடுப்பதில்லை இதன் மீது அரசு போதிய நடவடிக்கை எடுக்க ஆவன செய்ய வேண்டி ஈரோடு நகரகோட்டாட்சிதலைவரை மார்ச் 18 அன்று சங்கதலைவர்களானதோழர்கள்நாராயணன், எம்.என். காளியண்ணன் ஆகியோர் சந்தித்து கோரிக்கை மனு கொடுத்தனர்.

# பெண் தொழிலாளர்களின் கூலிப் போராட்டம் வெற்றி

போடி, மார்ச் 20—

உத்தமபாளையம் தாலுகா லட்சுமிநாயக்கன் பட்டியில் நடைபெற்ற கூலி உயர்வுப் போராட்டத்தின் பக்கத்துக் கிராமம் கிருஷ்ணம் பட்டியிலும் எதிரொலித்தது.

அங்குள்ள பெண் தொழிலாளர்கள் அனைவரும் விவசாயத் தொழிலாளர்கள் சங்கத்தின் கீழ் அணிதிரண்டு தோழர்கள் ராமசாமி, பொன்னையாத்தேவர் தலைமையில் பெரும் ஊர்வலம் நடத்தினர்கள்.

லட்சுமிநாயக்கன் பட்டியில் கொடுக்கும் கூலி எங்களுக்கும் வேண்டுமென பெண் தொழிலாளர்கள் கோஷமிட்டுச் சென்றார்கள். மறுநாள் வேலைக்குச் சென்ற பெண்கள் தாங்கள் வாங்கி வந்த ரூபாய் 1.75 கூலிக்குப் பதிலாக ரூ 2-50 கூலியாக வாங்கினார்கள்.

அனைத்து விவசாயத் தொழிலாளர்கள் ஆண், பெண் அனைவரும், விவசாயத் தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்துள்ளார்கள்.

# சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணியின் மாவட்டக்குழு கூட்டம்

தோழர்களே !

வாலிபர் முன்னணியின் மாவட்டக் கமிட்டி கூட்டம் வருகின்ற 24. 3. 74-ம் தேதி ஞாயிற்றுக் கிழமை காலை சரியாக 10 மணிக்கு, கோவையில் ஜில்லா கமிட்டி காரியாலயத்தில் நடைபெறும். மாவட்ட கமிட்டி உறுப்பினர்கள் அனைவரும் தவறாது குறித்த நேரத்தில் கூட்டத்திற்கு வந்து சேர கேட்டுக் கொள்கிறேன்.

தோழமையுள்ள,
கே. சி, கருணாகரன்
செயலாளர்.

## இந்திய அரசாங்கம்

# உரமுதலாளியிடம் சரணடைந்தது

## நாடாளுமன்றத்தில் ஜோதிர்மாய்பாசு பேச்சு

புதுடெல்லி, மார்ச். 20—

இந்திய விவசாயிகளுக்கு சப்ளை செய்யப்படும் உரத்தின் விலையே உலகத்தின் மற்ற எந்நாட்டிலும் விற்கப்படும் உரத்தின் விலையைக் காட்டிலும் அதிகமானது அவ்வளவு அதிக விலையை இந்திய விவசாயிகள் உரத்திற்காக கொடுக்கவேண்டியுள்ளது ஏனெனில் இந்தியாவில் உரம் தயாரிக்கும் ஏகபோக முதலாளிகளிடமும், வெளிநாட்டிலிருந்து இந்தியாவுக்கு வெளிநாட்டு முதலாளிகளிடமும் இந்திய அரசாங்கம் முற்றிலுமாக சரணடைந்து விட்டது என்று மார்க்சிஸ்ட் கட்சியின் பார்லிமெண்ட் உறுப்பினர் தோழர் ஜோதிர்மாய் பாசுகுற்றம்சாட்டினார்

### குறைவான விலையாம்

இக்குற்றச் சாட்டுக்கு ஆதாரமாக தோழர் ஜோதிர்மாய்பாசு உணவு விவசாய அமைப்பின் அறிக்கையிலிருந்து மேற்கோள் காட்டினார்,

ஆனால் பெட்ரோலிய ராஜாங்கஅமைச்சர்நவாஜ ஹான் இக்குற்றச்சாட்டை மறுத்தார்.

அவர் தமது மறுப்பின் போது-இந்தியாவில் உலக மார்க்கெட்டில் விற்கும் உரத்தின்விலையைவிட இந்தியாவில் விற்கும் உரத்தின் விலை நிச்சயமாக குறைவானது என்றார்.

உடனே தோழர் பாசு அமைச்சர் உண்மையை மறைக்கிறார் என்பது மட்டுமல்ல. தான் சொன்ன உண்மையை மறுக்கிறார் எனக்கூறி அமைச்சர் எழுதிய கடிதத்தைக் காட்டினார். கடிதத்தைக் காட்டிக் கொண்டே அந்த கடிதம் நான்கு அல்லது 5 நாட்களுக்கு முன்தான் எழுதப்பட்டது என்றும் அமைச்சரால் பார்லிமெண்ட் கேலிக் கூத்தாக்கப்படுகிறது என்றும் சுட்டிக்காட்டினார்.

பாவம் அமைச்சரின் முகம்போனபோக்கு பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

# காங்கிரஸ் எம்.பி.யை விவசாயிகள் 'கெரோ'

கல்கத்தா மார்ச் 19—

மேற்கு வங்கத்திலுள்ள பர்துவான் ஜில்லாவின் மெமாரி என்னும் கிராம விவசாயிகள் உரம் கோரி பார்லிமெண்ட் உறுப்பினரை கெரோசெய்தனர்.

வேளாண்மைக்கு உரம் போட வேண்டிய தக்கதருணத்தில் விவசாயிகள்உரம் கிடைக்காமல் திணறினர். இதனால் ஆத்திர முற்று உர விநியோகத்திற்கு பொறுப்பான பிளாக் டெவலமெண்ட் ஆபிசிற்கு1500 விவசாயிகள் ஊர்வலமாகச் சென்றனர். அலுவலகத்தில் இருந்த ஆபிசர்கெரோ செய்யப்பட்டார். நெல் பயிருக்கு தேவையான உர விநியோகம் செய்ய வேண்டுமென கோஷமிட்டனர்.

### மக்கள் பிரதிநிதி

அச்சமயத்தில் காங்கிரஸ் பார்லிமெண்ட் உறுப்பினரான சாட்டர்ஜி அங்குவந்தார். உரம் கிடைப்பதற்கு எவ்வித வழியையும் சொல்லாமல்அமைதியாககலைந்து செல்லுமாறு மட்டும் வற்புறுத்தினர்.

உடனே அவ்விவசாயிகள் அவரைநோக்கிமக்கள் பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொண்டு விவசாயிகளுக்கு தேவையான உரத்துக்குக்கூட ஏன் ஏற்பாடு செய்யவில்லை என அப்பார்லிமெண்ட் உறுப்பினரையும் கேரோ செய்தனர்.

# துவாக்குடிமலையில் ஆர்ப்பாட்ட ஊர்வலம்

துவாக்குடி, மார்ச்.19—

நியாய விலைக்கடை ஏற்படுத்தி அதன் மூலம் நியாய விலையில் தேவையான சீனி, மண்ணெண்ணை, அரிசி, பருப்பு போன்றகோரிக்கைகளை வலியுறுத்திதுவாக்குடி மலை கீழ் வெண்மணி மன்றத்தின் சார்பில்இளைஞர்களின் உணர்ச்சிமிக்க ஊர்வலம் நடைபெறுகிறது.

### அவலநிலை

துவாக்குடி மலையில் கல் உடைக்கும் கட்டிடம் கட்டும் தொழிலாளர்களும், இன்டஸ்ட்ரீஸ் தொழிலாளர்களும் மிகுந்த ஊராகும்.

இங்குள்ள 2000 குடும்பத்தாரில் அரைகிலோ முக்கால்கிலோ சீனி வீதம் பாதிக்குடும்பங்களுக்கே கூட சீனி கிடைப்பதில்லை.

மேலும் அதிகப் பணம் கொடுக்க முடிந்தவர்கள் மண்ணெண்ணையை டின் டின்னாக வாங்கிச் செல்கின்றனர். ஆனால் ஏழை மத்தியதர குடும்பத் தாய்மார்களோ கடை கடையாக அலையும் அவல நிலை.

மேலும் 300 குடும்பங்கள் உள்ள இவ்வூரில் போஸ்ட் ஆபீஸ் இல்லை. தேவையான கார்டு, கவர்களை கடைகளில் அதிக விலை கொடுத்து வாங்க வேண்டிய அவலை.

### ஆர்ப்பாட்ட ஊர்வலம்

எனவே, மேலே கூறப்பட்ட குறைபாடுகளை நீக்கக்கோரியும், நியாய விலைக் கடைகள் மூலம் தேவையான சீனி, மண்எண்ணை, அரிசி, பருப்பு போன்ற அத்தியாவசிய பொருட்கள் வழங்கக் கோரியும் துவாக்குடிமலையில் ஒரு தபால் நிலையம் அமைத்துக் கோரியுமே இவ்வூர்வலம் நடைபெற்றது.

இவ்வூர்வலம், திருச்சி வட்ட மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் வரதராஜன் தலைமையில்உணர்ச்சிமிகு கோஷங்களோடு நடைபெற்றது.

ஊர்வலம் இறுதியில் மாவட்ட ஆட்சி அலுவலகம் சென்று மாவட்ட கட்சி தலைவரிடம் கோரிக்கைகள் அடங்கிய மனு ஒன்றும் கொடுக்கப்பட்டது.

# சோஷலிஸ்ட் சீனமா?....

(1-ம் பக்க தொடர்ச்சி)

மாடுகளும்குதிரைகளும் அகப்படாத ஊர்களில், மனிதர்களே கலப்பைகளை இழுத்து நிலம்உழுதார்கள். அவர்களுக்கு விவசாய வேலைகள பற்றிய சிறந்த அனுபவங்களையும் உதவிகளையும் அரசாங்கம் கொடுத்தது.

ரசாயன உரம் அகப்படாத நிலைமையில், அந்த இடங்களில் விவசாயிகள் வண்டல் மண்ணையும், அழுகிய இலை தழைகளையும், பாசியையும் பயன்படுத்தினார்கள்.

கைத் தொழிலாளிகள் விவசாயிகளுக்கு வேண்டிய கருவிகளையும் ஆயுதங்களையும் செய்து கொடுத்தார்கள். மற்றும் துணிமணிகள், சாதாரண உபயோகப் பொருட்கள் ஆகியவற்றைச் செய்து கொடுத்தார்கள். இது ஒரு புறம்,

### தொழில் வளர்ச்சி துரிதமடைய

இரண்டாவதாக. அரசாங்கத்திடம் உள்ள மூலதனமானது சிறிதளவே இருக்கின்றபோது அதை எதில் ஈடுபடுத்த வேண்டும் என்று அரசு யோசித்தது. பின்னர் வெகுதுரிதமாக தொழில் வளர்ச்சியை உண்டாக்கப்போகின்றனர். இயந்தரக்கருவி உற்பத்தியில் முதலீடு செய்யப்பட்டது.

இந்தியாவில் பணக்காரர்களுக்கே பயன் பட்க்கூடிய அதிக அவசிய மில்லாததும் ஆடம்பரமானதுமான பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் அரசாங்கப்பணத்தைக் கொட்ட வில்லை இந்தியாவில்தான் ஆடம்பரப் பொருள் உற்பத்தியில் அரசாங்கப்பணம் பாய்ச்சப்படுகிறது.

—அந்நிய உதவியையே எதிர் நோக்காமல் சொந்த பலத்தையே சார்ந்திருக்கும் சுயபலக் கொள்கையுடையஎந்த ஒருதேசமும் தனதுதிட்டத்தில் இயந்திரநிர்மாணத் தொழிலுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும். சீனாவின் திட்டத்தில் இது முதலிடம் பெற்றது.

சீன தேசமானது. உருக்கு உற்பத்தியில் கண்ணும் கருத்துமாக இருந்தது. மோட்டார் கார்களை உற்பத்தி செய்வதில் உற்சாகம் காட்டவில்லை.

1965-ம் ஆண்டில், சீனாவின் குருட் உருக்குஉற்பத்தியானது, 1கோடியே 10 லட்சம்டன்களாகும்.

1972ம் ஆண்டில் அது 2 கோடியே 30லட்சம் டன்களாகத் தாவியது.

ஆனால் இந்தியாவின் உருக்கு உற்பத்தி நிலைமை எப்படி இருக்கிறது என்று பாருங்கள்! கடந்த பல ஆண்டுகளாக இந்தியாவின்இரும்பு- உருக்கு உற்பத்தியானது65லட்சம் டன் அளவையே வட்டமிட்டுக்கொண்டிருக்கிறது.

### டிரக்கு வண்டிகள்

1970-ம் ஆண்டில் சீனாவிடம் 4 லட்சத்து 9 ஆயிரம் டிரக்கு வண்டிகள் இருந்தன .30 ஆயிரம் பஸ்கள் இருந்தன.

அதே ஆண்டில் இந்தியாவில் 3 லட்சத்து 21 ஆயிரம் டிரக்குகளும் 90 ஆயிரம் பஸ்களும 1லட்சத்து 13 ஆயிரம் இதர வகை வாகனாதிகளும் இருந்தன.

சீனாவிடம் பிரயாணிகள் கார்களும் ஜீப்புகளும், டாக்ஸிகளும் 60 ஆயிரமே இருக்கும போது இந்தியாவிடம் 6லட்சம் இருக்கிறது.

இப்படி வண்டி வாகனாதிகள் கூடுதலாக இருப்பதைவைத்து. இந்த விஷயத்தில் சீனா மிகவும் பலவீனமாக இருப்பதாகக்கூறுவதானது, தனது அறிவை தானே மழுங்கடித்துக் கொள்ளுவதாகும்;

சீனதேசம், ஒவ்வொரு மாநில வாரியாக, எவ்வளவு துரிதமாக, தன்னிறைவு அடையக்கூடியவாறு முன்னேறிக்கொண்டிருக்கின்றது என்பதைப்பார்ப்போம்

—தொடரும்

# உத்திரபிரதேசத்தில் கவர்னர் பட்டபாடு

லட்சுமணபுரி, மார்ச். 20-

உத்திரபிரதேச சட்டசபை மேல் சபை ஆகியவற்றின் கூட்டுக்கூட்டம் நேற்று நடைபெற்றது, இக்கூட்டத்தில் கவர்னர் அக்பர் அலிகானுக்கு பட்ஜெட் உரையை ஆற்ற இயலவில்லை. எதிர் கட்சி உறுப்பினர்களின் ஏகோபித்த குரலுக்கு பணியவேண்டியநிலை அவருக்கு ஏற்பட்டது.

கவர்னர் கையிலிருந்த அச்சடிக்கப்பட்டஉரையை எதிர்ககட்சி உறுப்பினர்கள் பறித்து சென்றனர்.

அவர் பேசத்தொடங்கியதுமே "கவர்னரே திருப்பிப்போ" என்ற குரல் சட்டசபை மண்டபத்தை அதிரச் செய்து வெளிக்கிளம்பிற்று:

தனது கையில் இருந்த உரை எதிர்கட்சி உறுப்பினர் கைகளுக்கு மாறியதும் என்ன செய்வதென்றுதெரியாது கவர்னர் தனது இருப்பிடத்தில் அமர்ந்து விட்டார்.

நாட்டில் ஏற்பட்டுள்ள கடுமையான உணவுத் தட்டுப்பாடு, வறுமை ஆகியவை குறித்தும், தேர்தலில் வெற்றிபெற இந்திராகாங்கிரஸ் நடத்திய மிகக்கேவலமான ஊழல்கள் பற்றியும் விளக்கிக்கூறிவிட்டு எதிர் கட்சி உறுப்பினர்கள் சபையைவிட்டு வெளி நடப்பு செய்தனர்.

போலித்தனமான முறைகளில் வெற்றி பெற்று அமைச்சரவை அமைத்தவர்கள் தயாரித்துக் கொடுத்த பட்ஜெட் உரையைப் படிக்க கவர்னருக்கு என்ன தகுதியுள்ளதுஎன்று எதிர் கட்சி உறுப்பினர்கள் கேள்விக்கணை தொடுத்தினர்.

ஜனநாயகத்தைக் கொலை செய்து விட்டு தான் உத்திரப்பிரதேசத்தில் பகுகுண அமைச்சரவை அமைக்கப்பட்டுள்ளது என்று சபதி நேற்று உ. பி. சட்டசபை முன் எதிர்க் கட்சி தொண்டர்கள் ஆயிரக்கணக்கானோர் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

ஏப்ரல் 11-ம் தேதி ஜனநாயக பாதுகாப்புநாளும் இந்திரா ஒழிப்பு நாளும் அனுஷ்டிக்கப் போவதாக சம்யுக்த சோசலிஸ்ட் கட்சி தலைவர் ராஜ்நாராயணன் அறிவித்துள்ளார்.

சட்டசபை மாணவர் ஆர்ப்பாட்டத்துக்குத்தலைமை வகித்த லட்சுமணபுரி பல்கலைக்கழக மாணவர் ஒன்றிய தலைவர் சுபாஷ்சப்ராவும் மற்றும் 8 மாணவர் தலைவர்களும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

முகவரி மாற்றம்

கே. ரமணி
தலைவர், சி ஐ டி யூ
தமிழ்மாநிலக் குழு
அன்னபூரண
லே அவுட்-13
சித்தாபுதூர்
பாப்பநாயக்கன் பாளையம்
கோயம்புத்தூர்-18
போன்: 34666

## சாகித்திய அகாடமி உறுப்பினர்கள்

புதுடெல்லி மார்ச்19—

ஸாஹித்ய அகாடமியின் பொதுச்சபை நான்கு புதிய கௌரவ உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துள்ளது.

அவர்கள் 1. பேராசிரியர் வி.வி. மிராஷி; இந்தியஇயல் நிபுணர்ஸமஸ்கிருத அறிஞர் 2 பேராசிரியர் வி ஆர். திரிதிரிவேதி, இலக்கிய விமர்சகர். 3 டாக்டர் சுகுமார் சென். எழுத்தாளர், 4 டாக்டர் மாஸ்தி வெங்கடேஸ அய்யங்கார், எழுத்தாளர்.

ஏற்கெனவே கௌரவ உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் காலஞ்சென்ற ஸி ராஜகோபாலாச்சாரி, காலஞ்சென்றஸ்ரீ தாராசங்கர் பானர்ஜி, சுமித்ராநந்தன்பந்த், ரகுபதி சஹாய், பிராக் கொரக்புரி காகா ஸாஹேப் ஹெப்கெல்கர், காளிநகிசரண் பாணிக்ராஹி, பேராசிரியர் எம். யு. மலகானி ஆகியோர்.

அகாடமி அமைப்புச் சட்டம் உயர்ந்த பட்சம் 21 கௌரவ உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவகை செய்கிறது.

## இலங்கையில் பட்டினிச்சாவு

கொழும்பு, மார்ச் 19—

இலங்கையில் மத்திய மலைப்பகுதிகளிலுள்ள தேயிலைத் தோட்டங்களில் வேலை பார்க்கும் இந்திய தோட்டத் தொழிலாளரிடையே தொடர்ந்து பட்டினிச் சாவுகள் ஏற்பட்டு வருகின்றன. இப்பகுதியில் உணவுப் பஞ்சம் கடுமையாக இருக்கிறது.

பட்டினிச் சாவுகள் திட்டமாக எததனை என்பது அதிகாரபூர்வமாக தெரியவில்லை. ஆனால் 200 இருக்கும் என்று இலங்கை ஊழியர்கள் காங்கிரஸ் தலைவர் திரு. எஸ். தொண்டைமான் கூறினர்.

பண்டாரநாயகா சர்க்காரை ஆதரிக்கும் தொழிற்சங்கங்கள் பல பட்டினிச் சாவுகள் நடந்துள்ளன என்று மட்டுமே கூறுகின்றன.

பசிக் கொடுமை தாங்காமல் தற்கொலை செய்து கொள்வதாகவும் ஏழை பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை விற்பதாகவும் பத்திரிகைகளில் செய்திகள் வெளி வந்துள்ளன.

மலைக்கு உடனடியாக உணவுப் பொருட்களை அனுப்ப அவசர நடவடிக்கை எடுக்குமாறு பிரதமர் திருமதி பண்டாரநாயகாருக்கு ஆதரவாக ஐக்கிய தோட்டத் தொழிலாளர்கள்சங்கம்கேட்டுக் கொண்டிருக்கிறது.

தோட்டங்களில் உள்ள தொழிலாளர்கள்நிலை பற்றி கவலை தெரிவித்துஇலங்கை பிரதமர் நிவர்த்தி நடவடிக்கை எடுப்பதாக தோட்டத் தொழிலாளர் தலைவர்களிடம் உறுதி கூறினர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை.625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.